KALKI
.4.2004
.6.00

# கல்கி






# இந்தியா ஒளிருமா?

-மினி சர்வே

உள்ளே...
நீ நான் நாம்!
மினி கல்கி






அய்யர் ஆகட்டும் இல்ல அரோரா.

அனைவரின் போஷாக்கு, பார்லே-ஜீ.



உலகின் மிக அதிகமாக விற்பனையாகும் பிஸ்கட்.






Visit: www.parleproducts.com

everest/2004/PP/4 tm

கல்கி
4.4.2004











● காங்கிரசில் கோஷ்டிப் பூசல்கள் கொடிகட்டிப் பறப்பது 'கல்கி' அறியாததா? மூத்த தலைவர்களுள் ஒருவரைப் பிரதமர் என்று அறிவித்தால், அறிவிக்கப்படாத பெரிசுகள் முகம் சுளிக்க, கட்சி பிளவுபடுமல்லவா! கட்சியையும் காப்பாற்றி, நாட்டையும் காப்பாற்ற முயற்சிக்கும் சோனியாவின் செயலில், சாணக்கியம் இல்லையென்றாலும் சாதுர்யம் ஒளிர்கிறது.

பெருமாள் தேவன் பட்டி,
எஸ்.அசாதி

● "அந்தக் கத்துக்குட்டிக்கா உங்க வோட்டு?" என ஜெயலலிதா கேட்பது, தன்னைத்தானோ என நினைத்து தயாநிதி மாறன் தவிக்கும் அந்த கார்ட்டூன், உமக்கு குறும்பு மட்டுமல்ல, குசும்பும் உண்டு என்பதை உணர்த்தி விட்டதய்யா!

வேலூர் - 6, வே.ந.கதிர்வேல்

● நரசிம்ஹ மகிமையை விவரித்து 'குறையொன்றுமில்லை' அமுதத் தொடரை நிறைவு செய்து சிலிர்க்க வைத்து விட்டார் முக்கூர் ஸ்வாமிகள்.

அயன்புரம், த. சத்தியநாராயணன்

# குறும்பு மட்டுமல்ல!

● கும்பகோணம் மகாமகத் திருவிழாவிற்கு 500 மூட்டை அரிசி அளித்த முஸ்லிம் அன்பரைப் பற்றிய கேள்விக்கு பதில் அளித்தது, மேல் உலகத்திலிருந்து அமரர் கல்கியேவா? சர்வ சமய நல்லுறவைத் தூண்டும் வகையில் நகைச்சுவை உணர்வோடு பதில் அளித்தது சிறப்பு.

சென்னை-106, வி.சின்னஸ்வாமி

● படம் பார்க்கும் போது மனசுல என்ன நினைச்சமோ', அதை அப்படியே எதிரொலித்து 'அடிதடி' திரைப்பட விமர்சனம்.

திருப்பாலை,
பாரதி. இளங்கோவன்

● 'மேஸ்ட்ரோ கல்கி'க்காக 'மினி கல்கி'யா? அல்லது மினியின் இன்றைய தலைப்பிற்காக அமரர் 'கல்கி'யின் அன்றைய கால எழுத்துகளைத் தேடிப் பிடித்துத் தருகிறீர்களா? வாரந்தோறும் ஆச்சர்யம் கொள்ள வைக்கின்றீர்களே!

நெய்வேலி, க. சுந்தர்

● சர்வ கட்சியினரும் பயன்படுத்திக் கொள்ள, 'நோ லாஜிக், ஒன்லி மேஜிக்' கதைகளை வெளியிட்ட உமது பரந்த மனப்பான்மையை நினைத்துப் பூரிப்படைந்தேன்!

மதுரை,
என். பாலகிருஷ்ணன்







● 'தேர்தல் ஆணையத்தின் கிடுக்கிப் பிடியை, அரசியல் தலைவர்கள் டிமிக்கிப் பிடியால் ஏமாற்றுகின்றனர்' என்ற 'தராசு' பதில் சூப்பர்!
திருவண்ணாமலை, எல்.எம். மங்கை

● 'நமக்கே உரிமையாம்' தொடரின், இந்த வாரத் தலைப்புக்கும் (இன்னும் எத்தனைக் காலம்?) காங்கிரஸ் மேலிடம் ப.சிதம்பரத்துக்கு சீட் உண்டா, இல்லையா என முடிவு செய்யாமைக்கும் பொருத்தமாக அமைந்து விட்டதே!
திருவரங்கம், அ. சம்பத்

# ...து அம்பு!



● 'ஈர மனசு' சிறுகதையில் ஏழை உழவனின் ஆசாபாசங்களை அழகாக எழுதியுள்ளார் மதுபாக்யா.
லால்குடி, எம். இராஜேந்திரன்

● விடுதலைப்புலிகள் இடையே ஏற்பட்டுள்ள பிளவை, 'நச்' என, உணர்த்தியது மூன்றாவது கார்ட்டூன்!
கும்பகோணம், கே.என். பாலகிருஷ்ணன்



● வைகோவுக்கு 60 மார்க்கா? விடுதலைப் புலி ஆதரவுக்காக நிறைய மைனஸ் பண்ணணுமே!
சென்னை - 5,
கே.தெய்வசிகாமணி




# கல்கி

பரதன் பப்ளிகேஷன்ஸ் பிரைவேட் லிமிடெட்டிற்காக பரதன் அச்சகத்தில் அச்சிட்டு வெளியிடுபவர் :
கி. ராஜேந்திரன்

கல்கி பில்டிங்க்ஸ்,
47-N.P., ஜவாஹர்லால் நேரு சாலை,
ஈக்காடுதாங்கல், சென்னை - 97

ஆசிரியர் :
சீதா ரவி

ஆசிரியர் குழு :
செ. ஏக்நாத் ராஜ்
அனுராதா சேகர்
ஆர்.சி. ஜெயந்தன்

வடிவமைப்பு :
எஸ். ஸ்டீஃபன்
பி.ஆர். ராஜன்

தொலைபேசி :
22345622, 23, 24
தொலைநகல் :
044 - 22345621

மின்னஞ்சல் :
ஆசிரியர் குழு :
kalki@kalkiweekly.com
சந்தா பிரிவு :
subscription@kalkiweekly.com
பிற தகவல்களுக்கு :
info@kalkiweekly.com
கல்கி இன்டர்நெட் முகவரி :
www.kalkionline.com

சந்தா விவரம் :
உள்நாடு :
ஒரு வருடம் : ரூ.330/-
ஆறு மாதம் : ரூ.165/-
வெளிநாடு (விமானத்தபால்) :
ஒரு வருடம் : 62 யு.எஸ். டாலர்
இலங்கை : ரூ.2000/-

**Bharathan Publications Private Limited,**
Kalki Buildings,
47-NP, Jawaharlal Nehru Road,
Ekkaduthangal, Chennai - 600 097.

ஒவ்வொரு இதழும் உங்கள் மேன்மைக்கு

'இந்தியா ஒளிர்கிறது' என்கிறது பி.ஜே.பி. மறுக்கின்றன எதிர்க்கட்சிகள். இந்தத் தேர்தலுக்குப் பிறகாவது ஒளிருமா என்று கேட்டபோது...



**ஞாநி (பத்திரிகையாளர்) :** இந்தியா ஒளிர்வது என்பது ஒரு தேர்தல், இரண்டு தேர்தல்களில் முடிகிற விஷயமல்ல. முதல் விஷயம் எல்லோருக்கும் ஒரே தரத்தில், சமமான கல்வி தேவை. ஒரே கல்வி என்பது, பணம் அதிகமாகக் கொடுத்தால் ஒரு கல்வி, பணமில்லையென்றால் ஒரு கல்வி என இப்போதிருக்கிற மாதிரி அல்ல; எல்லோருக்கும் ஒரே நிலையிலான, தரத்திலான கல்வி தேவை. அதைப் பொறுத்துதான் இந்தியா ஒளிர்வதை நோக்கிச் செல்ல முடியும்.

இரண்டாவது, அரசியலில், எப்பொழுது மதம் ஒரு விஷயமாக இருந்து கொண்டு, மக்களைப் பிரிக்கப் பயன்பட்டுக் கொண்டிருக்கிறதோ, அதுவரை ஒளிர வாய்ப்பில்லை. இது மாறினால் வாய்ப்பிருக்கிறது.





**பஞ்சாட்சரம் (சிப்பா தொண்டு நிறுவனம்) :** இந்தியா கிராமங்களில்தான் வாழ்கிறது. அதனால் கிராமங்கள் தன்னிறைவு பெற வேண்டும். ஆண்களுக்கு இணையாகப் பெண்களும் இன்றைக்கு உழைப்பதற்குத் தயாராகிவிட்டார்கள். ஆனால் அவர்களுக்கு இணையான ஊதியம் பெண்களுக்குக் கிடைப்பதில்லை. சமூக, பொருளாதார, அரசியல் ரீதியிலான செயல்பாடுகளோடு, ஆண்களுக்கு இணையாக பெண்களும் வாழ்ந்திட அரசும், அரசியல்வாதிகளும் பேச்சளவிலிருந்து செயல்பாட்டுக்கு மாறினால், இந்தியா ஒளிர வாய்ப்பிருக்கிறது.



**டாக்டர் பி. சந்திரசேகரன்** (தடய அறிவியல் நிபுணர்) : மக்களிடம் இருக்கும் அறியாமை இருள் அகலணும். ஒரு தெளிவு வரணும். எல்லோரும் வோட்டுப் போடணும். வோட்டுப் போடாமல் இருக்கும் ஒவ்வொருவர் மீதும் நாட்டை இருளில் இருக்க துணைபோவதாகக் குற்றம் சாட்டலாம். அனைவரும் அறியாமை நீங்கி தெளிவோடு வோட்டுப் போடும்போது நல்லவர்கள் ஆள்வார்கள். நாடு ஒளிராமல் போய் விடுமா?

**ஏ.கே.வெங்கடசுப்பிரமணியன்** (ஐ.ஏ.எஸ். - ஓய்வு) : உண்மை - உழைப்பு - ஒற்றுமை. இவை மக்களிடம் இருந்தால் தான் இந்தியா ஒளிரும். அரசியல்வாதிகளின் செயல்பாடு, இந்தப் பண்புகளை மக்களிடம் வளர்க்கக் கூடியதாக இருக்க வேண்டுமே தவிர, குலைக்கக் கூடியதாக இருக்கக் கூடாது.

**டி.எஸ். ராகவன்** (முன்னாள் தலைவர் - இந்தியன் வங்கி) : ஜாதி மத வித்தியாசமின்றி, ஏழை, பணக்காரன் வித்தியாசமின்றி, எல்லோருக்கும் வாய்ப்புகள் கொடுக்கப்பட வேண்டும். அப்போது தான் சிறப்பானவர்கள் மற்றும் தகுதி படைத்தவர்களின் பங்களிப்பு, நாட்டுக்குக் கிடைக்கும். அரசு, இதற்கான சூழலைத்தான் ஏற்படுத்த வேண்டுமே தவிர, எல்லாவற்றிலும் நுழைந்து, தலையிட்டு அதன் விளைவாக அரசியல்வாதிகளின் அத்து மீறல்களுக்கு இடமளிக்கக் கூடாது.

**பூகிசேது** : இரண்டு விஷயங்கள் உடனே எனக்குத் தோன்றுகின்றன. ஒன்று அர

# இந்தியா ஒளிருமா?


• பூகிசேது


• பஞ்சாட்சரம்


• சந்திரசேகரன்


• சுமதி


• வைகுந்த்


• டி.எஸ்.ராகவன்


• ஞாநி


• ஏ.கே.வி.எஸ்.


• நாகநாதன்

சியல்வாதிகளின் தரம் உயரணும். ஊழல் கறைபடியாத ஒழுக்கமுள்ள அரசியல் வாதிகள் நாட்டை ஆளணும். அடுத்து 'போலி மதச்சார்பின்மை' ஒழியணும். அப்போதுதான் உண்மையான சமத்துவ மும், சகோதரத்துவமும் மக்களிடம் இருக்கும். நாடு செழிக்கும்.

**பேராசிரியர் நாகநாதன்** *(தலைவர் - பொருளாதாரத் துறை - சென்னைப் பல்கலைக்கழகம்)* : இந்தியாவில் எழுபத்தைந்து சதவிகித மக்கள் கிராமங்களில் வாழ்கிறார்கள். அவர்களின் பிழைப்பு விவசாயத்தைச் சார்ந்ததாகவே இருக்கிறது. எனவே அடிப்படையான சீர்திருத்தம் என்பது, விவசாயத்துறையில்தான் செய்யப்பட வேண்டும். நம்மைவிட மக்கள் தொகை அதிகமுள்ள சீனாவில் விவசாயத் துறையில் செய்யப்பட்ட சீர் திருத்தம், பெரிய மாறுதலைக் கொண்டு வந்துள்ளது. நம் நாட்டிலும் அதுபோலச் செய்தால் கிராமங்கள் ஒளிரும். கூடவே நகரங்களும்தான்.

**சுமதி** *(வழக்கறிஞர்)* : சமீபத்தில் குஜராத்தில் ஒரு மாஜிஸ்ட்ரேட் ஜனாதிபதிக்கே வாரண்ட் கொடுக்கும் நிலைக்குப் போய்விட்டார். நீதித் துறையில் மட்டுமல்ல, எல்லாத் துறைகளிலும் இன்று ஊழல் இருக்கிறது. குஜராத் விவகாரம் பெரிதுபடுத்தப்பட்டிருக்க வேண்டும். இதை ஏதோ சிறிய தப்பு போல ஒதுக்கித் தள்ளுவது, மாபெரும் தவறு. அதே போல் பல்வேறு துறை வல்லுனர்களின் அனுபவங்களையும், யோசனைகளையும் நாடு பயன்படுத்திக் கொள்ள வேண்டும். இதற்கான முன் முயற்சியை ஜனாதிபதி அப்துல் கலாம் உடனே எடுக்க வேண்டும். மக்களிடம் விழிப்புணர்வு வர வேண்டும். இது வராவிட்டால் இந்தியா செழுமையானாலும், இந்தியர்கள் வறுமையின் பிடியில்தான் இருப்பார்கள்.

**வைகுந்த்** *(காவல்துறை முன்னாள் தலைவர்)* : அனைவருக்கும் உண்ண உணவு, உடுக்க உடை, இருக்க இடம் கிடைக்க வழி செய்வதன் மூலம், வறுமைக் கோட்டுக்குக் கீழே இருக்கும் கோடிக் கணக்கான மக்களை மேலே கொண்டு வர முடியும். நமது வளர்ச்சித் திட்டங்கள் கிராமங்களைச் சார்ந்ததாக இருக்க வேண்டும். திட்டங்களின் பலன்கள் நேரடியாக மக்களைச் சென்றடைய வேண்டும். இவை நடந்தால், இந்தியா ஒளிரும்; மிளிரும்.

**- அப்பு, கௌசி**

# த்ரிஷாவுக்கு கோயில் சமர்ப்பணம்!

"இந்த தாரண வருஷம் என்னோட சினிமா கரியர்லே உதாரண வருஷமா இருக்கப் போகுது" என்று அடுக்கு மொழியில் கவிதை பேசினார் த்ரிஷா.

தமிழில் மூன்று முக்கிய படங்கள். 'கில்லி', 'ஆயுத எழுத்து', 'ஜி'... அப்புறம் தெலுங்கில் நான்கு. மகேஷ்பாபு, பிரபாஸ், பவன் கல்யாண், சித்தார்த் என்று டாப் ஹீரோக்களுடன் கை கோரக்கிறாராம். 'கில்லி' படத்துல பக்கா வில்லேஜ் காரெக்டர். பேரு தனா. 'ஆய்த எழுத்து'லே செம மாடர்ன்; பேரு மீரா. லிங்குசாமி டைரக்ட் பண்ற 'ஜி'ல புவனாஸ்கிற ப்ளஸ் டூ மாணவி காரெக்டர். "ஒவ்வொண்ணும் ஒவ்வொரு மாதிரி.. எப்படித்தான் சமாளிச்சேனோ?" என்று அழகாய் கவலைப்பட்டார்.



உபரித் தகவல் : டென்மார்க்கில் உள்ள பிள்ளையார் கோயிலை த்ரிஷா பேருக்கு சமர்ப்பணம் செய்திருக்கிறார்கள் அவருடைய என்.ஆர்.ஐ. ரசிகர்கள்.

**- அனு**

"தாத்தா கிளம்பப் போறாரு... உடனே வாங்க, இங்க தயா வெயிட் பண்ணிட்டிருக்கார்." என்று ஆங்கிலத்தில் கலாநிதி மாறனை அவரது மனைவி காவிரி,





# கண்ணில் படாத திருஷ்டிப் பூசணி; கையில் ஏற்ற பூரண கும்பம்!

செல்லில் அழைத்துக் கொண்டிருந்தார். உடன் தயாநிதியின் துணைவி ப்ரியா. சரியாக 2.55க்கு மாடியிலிருந்து லிப்டில் கீழே வந்தார் கலைஞர். பேராசிரியர் பொன்னாடை போர்த்த மற்ற பிரமுகர்களும் அதைத் தொடர, புன்னகையுடன் ஏற்றுக் கொண்டார் கலைஞர். சரியாக 3.05க்கு வேனில் ஏறினார். உடன் ஸ்டாலின், துரைமுருகன், தயாநிதி மாறன் மற்றும் கலைஞரின் துணைவி, தயாநிதி மாறன்.

மிர்சாகிப்பேட்டை மார்க்கெட்டிலிருந்து, ஐஸ் ஹவுஸ் போலீஸ் ஸ்டேஷன் வரை, உடன்பிறப்புகளின் கறுப்பு சிவப்பு கொடிகள்தான். சரவெடிகள் டெஸிபலை ஏற்ற, காதுக்குள் பட்டாம் பூச்சிகள்... கடற்காற்றையும் மீறி வெயில் வறுத்தெடுத்தது. பலர் நிழல் தேடி ஒதுங்கினார்கள். தூரத்தில் கலைஞர் வேனைக் கண்டதும் கூட்டம் உற்சாகத் துள்ளலில் குதித்தது. தலைகளிடையே ஊர்ந்து, கூட்டத்துக்கு மத்தியில் வந்து நின்றது வேன். உள்ளிருந்தபடியே தமது முதல் பிரசாரப் பேச்சைத் துவக்கினார் கலைஞர்.

"வீராணத்தில் தண்ணீர் இல்லை. எனவே தான் அந்தத் திட்டத்தை நாங்கள் கைவிட்டோம். ஆனால் ஜெயலலிதா 720 கோடி செலவு செய்கிறார். அதனால் அவரைத் தவிர வேறு யாருக்கும் எந்தப் பயனும் வரப் போவதில்லை" என்ற கலைஞர், அரசியல் பிரச்னைகளுக்குத் தாவினார். "இந்தியாவிலேயே தமிழகம் தான் வறுமைக்கோட்டுக்குக் கீழே இருப்பதாக, புள்ளி விவரங்கள் சொல்கின்றன. வீரமாமுனிவர், கால்டுவெல் ஆகியோர் தமிழ் மொழியின் சிறப்பை உணர்ந்து அதை வளர்க்கப் பாடுபட்ட அறிஞர்கள். அப்படிப்பட்டவர்கள் வளர்த்த தமிழ்



வந்தால் மழை பெய்யும் என்றார்கள். இப்போது என்ன மழை பொத்துக் கொண்டா கொட்டுது?" என்று குத்தலாகக் கேட்டார். மெரினாவை விட்டு திருவண்ணாமலையை நோக்கி வேன் கிளம்பியது. கலைஞர் பார்வைபடாத வண்ணம்



* மேடையில்

மொழியை செம் மொழியாக்க, மத்திய அரசு தயங்கியது. நாங்கள் என்.டி. ஏ.வை விட்டு வெளியே வர அது



* அலங்கார அழகு

ஒரு காரணம். வாஜ்பாயை செயல்படாத பிரதமர் என்று சொல்லிவிட்டு, இப்போது அவரை பிரதமர் ஆக்க வேண்டும் என்கிறார் ஜெயலலிதா..." என்று கலைஞர் முத்தாய்ப்பாக "அந்தம்மா ஆட்சிக்கு

திருஷ்டிப் பூசணி உடைத்தார்கள்.

**க**த்திபாரா ஜங்ஷன் அருகே உடன் பிறப்புகளும், தோழமைக் கட்சியினரும் காத்துக் கொண்டிருந்தார்கள். சாலையில் ஓரமாகப் போடப்பட்டிருந்த மேடையில் ரிகார்டு டான்ஸ். தொடர்ந்து பல்லா வரம், குரோம்பேட்டை, தாம்பரம் ஆகிய இடங்களிலும் சாலையில் கூட் டம். ஆனால் கலைஞர் எங்கும் பேசவில்லை.

ஸ்ரீ பெரும்புதூர் தொகுதி தி.மு.க. வேட்பாளர் கிருஷ்ணசாமி கூட, கலைஞர் வேனை நெருங்க முடியவில்லை. எனவே கிருஷ்ணசாமி, நூறடி தூரத்தில் இருந்த பத்திரிகையாளர்கள் வேன்மீது ஏறி கூட்டத்தைப் பார்த்து கை கூப்பி நின்று கொண்டார். "ஏழை எளியவர்கள் இறந்து போனால் ஈமக் கடன் செய்ய ஐந்நூறு ரூபாய் கொடுத்தோம் தி.மு.க. ஆட்சியில். இப்போது அதையும் நிறுத்திவிட்டார்கள். வாழத்தான் வழியில்லை. செத்தாலும் இந்த ஆட்சியில் பிரச்னைதான்" என்றார் கலைஞர் வேதனையுடன்.



"'கஜானா காலி' என்று நீங்கள் புலம்பு வது இந்த அளவுக்கு நம் மானத்தை வாங் கும்ன்னு நான் எதிர்பார்க்கலை, மன்னா?"

"ஏன், என்ன ஆச்சு?"

"காலியாக உள்ள கஜானா அறையை மாத வாடகைக்குக் கேட்டு, அண்டை நாட்டு மன்னன் ஓலை அனுப்பியுள்ளான்!"

- கிரிஜா மணாளன்




"எனக்கு ஞாபக மறதி அதிகமா இருக்குது டாக்டர்..."

"அப்ப எனக்கு முதலில் ஃபீஸ் கொடுத்துருக்க...!"

"வந்தவுடனே நூறு ரூபாய் நோட்டு கொடுத்தேனே, மறந்துட்டீங்களா...?"

- புரஃபசர் தோட்டம் ஜெயச்சந்திரன்

"'இந்தியா ஒளிர்கிறது'ன்னு ஒரு வாக் காளர்கிட்டே போய் சொன்னேன்!"

"சந்தோஷப்பட்டாரா...?"

"ஊஹூம்... 'பாவம்... கரண்ட் பில் ரொம்ப கட்ட வேண்டியதிருக்குமே'ன்னு வருத்தப் பட்டுட்டுப் போறார்!"

- நெல்லையப்பபுரம் செல்வன்



அடுத்து பெரிய கூட்டம் வாலாஜா பாத். இங்கு செங்கல்பட்டு பாராளுமன்றத் தொகுதி பா.ம.க. வேட்பாளர் ஏ.கே. மூர்த்தி. "எங்கள் கூட்டணிக்கு வோட்டுப் போடுங்கள். ஆறு மாதத்திற்குள்ளே அல்லது ஒரு வருடத்திற்குள்ளே நிச்சயம் சட்டமன்றத் தேர்தல் வரும். ஆட்சியை மாற்ற முடியும்" என்றார்.

காஞ்சிபுரம் எல்லையிலிருந்து பத்து கி.மீட்டருக்கு முன்பிருந்தே சாலையின் இருபுறமும் மக்கள். வரதராஜப் பெருமாள் கோயிலை ஒட்டி பூர்ண கும்பத்துடன் நின்றிருந்தார்கள் அந்தப் பகுதி மக்கள். 'அதை ஏற்றுக் கொள்வாரா கலைஞர்?' என்று பத்திரிகையாளர்களுக்குள் குட்டிப் பட்டி மன்றமே நடந்தது. ஆனால் கலைஞர் தொட்டு அதை ஏற்றுக் கொண்டார் என்ற செய்தி வந்தது. அப்படியே வழக்கப்படி அண்ணா நினைவகத்துக்கும் சென்று, சிலைக்கு மாலை போட்டார். அங்கிருந்து கூட்டம் நடக்கும் பெரிய காஞ்சிபுரம் வரை, எங்கு பார்த்தாலும் தலைதான், திருவிழாக் கூட்டம்தான். "மதுரையில் அழகர் ஆற்றில் இறங்கும் போதும், காஞ்சியில் கருட சேவையின்போதும் லட்சக் கணக்கில் மக்கள் கூடுவார்கள் என்று கேள்விப்பட்டிருக்கிறேன். அந்த நிகழ்ச்சி களை நான் பார்த்ததில்லை. ஆனால் இன்று நான் பார்க்கும் கூட்டம், அவற்றை நினைவு படுத்துகின்றன" என்றார் கலைஞர்.

**கா**ஞ்சிபுரத்தில் கலைஞர் பேசியது மத நல்லிணக்கப் பேச்சு. ஜெயலலிதாவின் அரசியலைக் குறிப்பிட்டு, முடிக்கும்போது 'பச்சை' என்று குறிப்பிட்டார். அதன் பிறகு இடைவெளி விட்டு 'சந்தர்ப்ப வாதம்' என்று சொன்னாலும், கூட்டம் அதை ஆபாசமாகப் புரிந்து கொண்டு நகைத்தது. கலைஞரின் உயர் அரசியல் நிலைக்கு இந்தப் பேச்சு தேவைதானா?

**- ப்ரியன்**

படங்கள் : **மீடியா ராமு**



# அக்கறை

அகிலா கார்த்திகேயன்

**வெ**குநாட்களுக்குப் பிறகு தமது மகனிடமிருந்து வந்த கடிதத்தைப் படிக்கும்போது பெரியசாமி கிழவருக்கு சந்தோஷமாக இருந்தது.

அன்புள்ள அப்பாவுக்கு,

அன்பு மகன் மாரியப்பன் எழுதியது. இங்கு யாவரும் நலம். உன் உடல்நிலை எப்படி உள்ளது? இந்த வயதான காலத்தில் நீ ஏன் அங்கே ஒண்டிக்கட்டையாய்த் தவிக்க வேண்டும் என்று உன் மருமகள் கவலைப்படுகிறாள். உன் பேரன்கள் இருவரும் தாத்தாவைப் பார்க்கணும் என்று ஏங்குகிறார்கள். நீயும் அத்தனை பெரிய வீட்டில், கிராமத்தில் இனியும் இருப்பது சரியல்ல. கடிதம் கண்டவுடன் கிளம்பி வந்து விடவும். உன் வரவை ஆவலுடன் எதிர்பார்க்கும்...

உன் அன்பு மகன்,
மாரி

பின்குறிப்பு : வரும்போது கிராமத்து வீட்டின் பத்திரங்களை மறக்காமல் கொண்டு வரவும்.

போஸ்ட் கார்டு கதைகள் வந்து குவிந்துவிட்டன. ரொம்ப தாங்க்ஸ். தேர்வு பெற்றவை தொடர்ந்து வெளிவரும். சளைக்காமல் எழுதி அனுப்புங்க!

தேர்தல் 2004 வாரிசுகள் விளையாட்டு அரங்கம்.

## கதவுகளைத் திறக்கும் காங்கிரஸ் அறிக்கை

சோனியாகாந்தி சட்டபூர்வமாக இந்தியப் பிரஜைதான். ஆனால் பிறப்பால் அயல்நாட்டினரான அவரை இந்தியப் பிரதமராக ஏற்பது என்பது, மக்களுக்கு உணர்வுபூர்வமாக இயலாத காரியம். இதனை பா.ஜ.கவும் பிற எதிர்க்கட்சிகளும் சுட்டிக் காட்டுவதில் வியப்பில்லை. ஆனால் அதோடு நில்லாமல் சோனியாவைக் கத்துக்குட்டி என்றும், அவருக்குப் பதிபக்தி இல்லை என்றும், அவர் பிரதமரானால் நாட்டின் பாதுகாப்புக்கே அபாயம் விளையும் என்றும் பேசுவது, மிக மிக மட்டரகமான பிரசாரம். இத்தகைய அநாகரிக, அபாண்டமான பிரசாரம்தான் வலுவடைந்து வருகிறது. இதற்கு இடம் தராமல் சோனியா காந்தி சாதுர்யமாக நடந்து கொள்ளத் தவறி விட்டார்.

உ.பி., பீஹார் மாநிலங்களில்தான் அதிகமான தொகுதிகள் உள்ளன. இத்தொகுதிகளில் தேர்தல் கூட்டணி அமைப்பதில் சோனியா வெற்றி பெறவில்லை. போதாக்குறைக்கு தமிழகத்தின் வேட்பாளர் பட்டியலைக்கூட வெளியிட முடியாத அளவுக்கு உட்கட்சிப் பூசல்!

இவற்றையெல்லாம் காண்கிறபோது, காங்கிரஸின் வெற்றி வாய்ப்புகள் குறித்து நமக்கு நம்பிக்கை பிறக்கவில்லை.

ஆனால், இந்தக் காரணத்துக்காக அக்கட்சியின் தேர்தல் அறிக்கையை நாம் புறக்கணிக்கவோ, ஒதுக்கிவிடவோ கூடாது. வேலைவாய்ப்பு பெருக்கம், விவசாயத் துறையில் கவனம் என இரண்டு முக்கிய குறிக்கோள்கள் அவ்வறிக்கையில் விவரிக்கப்பட்டுள்ளன. அவற்றை அடைவதற்கான வழிகளை




# கல்கி



2004 ஏப்ரல் 4
சுபானு பங்குனி 22
மலர் : 62
இதழ் : 36




விரிவாக விவரிக்கும் ஆவணங்கள் விரைவில் வெளியிடப்படும் என்றும் தெரிகிறது.

இத்தேர்தல் அறிக்கை, ஆட்சியின் ஆறு அடிப்படைகளைப் பட்டியலிடுகிறது:

இளைஞர்களுக்கு வேலை வாய்ப்பு

கிராம வளர்ச்சி

பொருளாதார புனர்வாழ்வு

சமுதாய நல்லிணக்கம்

மகளிர் மேம்பாடு

அனைத்துத் தரப்பினருக்கும் சமமான வாய்ப்புகள்.

- இவை அனைத்துமே போற்றுதற்குரிய அடிப்படைகள்தாம்.

எட்டு முதல் பத்து சதவிகித பொருளாதார வளர்ச்சியைக் குறியீடாக்கியிருக்கும் காங்கிரஸ், அதற்காக என்ன செய்யத் திட்டமிட்டுள்ளது...?

- அன்னியச் செலாவணி கையிருப்பை மின் உற்பத்தி திட்டங்களில் முதலீடு செய்வது. (அதன் மூலம் மின் உற்பத்தியும், தொழில் வளமும் பெருகும் என்பது எதிர்பார்ப்பு.)
- அனைத்து அரசுத்துறை நிறுவனங்களையும் கண்ணை மூடிக்கொண்டு தனியார் மயமாக்காமல், லாபகரமாக இயங்கும் பலவற்றை அரசே தொடர்ந்து இயக்குவது.
- மின் உற்பத்தியை அரசுக் கட்டுப்பாட்டில் வைத்துக்கொண்டு, வினியோகத்தைத் தனியார் வசம் ஒப்படைப்பது.
- மனித உழைப்பை அதிகமாகக் கோரும் ஆடைகள், கைவினைப் பொருட்கள், மென்பொருள், நகைகள், தோல் பொருட்கள் போன்றவற்றின் ஏற்றுமதியை ஊக்குவிப்பது.
- கிராமப்புற குடும்பங்களுக்கு ஆண்டில் நூறு நாட்களாவது வேலை வாய்ப்பு தரும் வகையில், பொதுப்பணிகளைத் திட்டமிட்டுச் செயல்படுத்துவது - இதற்கென ஒரு மசோதா அறிமுகப்படுத்தி, வேலை வாய்ப்புச் சட்டம் கொண்டு வருவது.

இவற்றையெல்லாம் விட முக்கியமான அம்சம், இந்தத் தேர்தல் அறிக்கை விவசாயத்துக்கும், விவசாயிகள் நலனுக்கும் முதன்மையான இடம் தருகிறது என்பதே!




அரசு நிதி ஒதுக்கீடுகள் விவசாயத்துக்கே முதலிடம் தரும். விவசாய மேம்பாட்டுக்கென பொது மக்களிடமிருந்தும் முதலீடு கோரப்படும். வறுமை நிரம்பிய பிற்பட்ட பகுதிகளில் கவனம் செலுத்தப்படும். இங்கெல்லாம் பாசன - மின் வசதிகள், தானிய சேமிப்புக் கிடங்குகள், விளை பொருள்கள் விற்பனை, ஆராய்ச்சிப் பணிகள், விரிவாக்கப் பணிகள் என அனைத்துப் பிரிவுகளிலும் திட்டமிட்ட மேம்பாடு இருக்கும்.

இத்தனைக்கும் மேலாக, விவசாய விளைச்சல் சார்ந்த தொழில்கள் பலவற்றை, விளைநிலங்களின் அருகிலேயே தொடங்க வழிவகை செய்வது அதி முக்கியம்.

இந்த அம்சத்தையும் கருத்தில் கொண்டு, இதற்கான விரிவான செயல்திட்டங்களை, காங்கிரஸ் வெளியிடவுள்ள தொலைநோக்கு, ஆவணங்களில் இடம் பெறச் செய்யும் என்று நம்பலாம்.

பெண்களுக்கு நாடாளுமன்றத்தில் 33 சதவிகித இட ஒதுக்கீடு, சிறுபான்மை இனத்தவருக்கு மேலும் ஒதுக்கீடுகள், போன்ற சில அறிவிப்புகளும் இந்தத் தேர்தல் அறிக்கையில் உள்ளன. அவை நமக்கு ஏற்புடையவை அல்ல.

ஆனால், இத்தகைய அம்சங்களை ஒதுக்கி விட்டுப் பார்த்தால், காங்கிரஸின் தேர்தல் அறிக்கை புதிய கதவுகளைத் திறந்துவிட முயற்சி செய்வதாகவே கருதலாம். நமது நாட்டின் மிகப் பெரிய செல்வம், அதன் மக்கட் செல்வம்தான். இதைப் புரிந்துகொண்டு, வேலை வாய்ப்புகளைப் பெருக்குவதன் மூலம், அந்த மனித வளத்தை முழுமையாகப் பயன்படுத்திக் கொண்டு, நாட்டின் பொருளாதாரம் மேம்படச் செய்கிற சிறந்த திட்டம் அது.

இவ்வளவு நல்ல திட்டத்தைக் கையில் வைத்துக் கொண்டிருந்தாலும், ஆட்சிக்கு வந்தால்தானே அதை நிறைவேற்ற முடியும்!

காங்கிரஸ் தலைவர் சோனியா காந்தி, இப்போதேனும் விழித்துக் கொள்ள வேண்டும். இத் தலையங்கத்தின் ஆரம்பத்தில் கூறப்பட்டுள்ள குறைகளைக் களைந்து, மத நல்லிணக்கக் கட்சிகளின் கூட்டணி வெற்றிபெற வழி வகுக்க வேண்டும். இனி ஒருவினாடிகூட தாமதிப்பதற்கில்லை. ○



# கெலிச்சுட்டோம்ல!

ஐந்து ஒரு நாள் பந்தயங்கள். ஒன்றில்கூட இந்தியா வெல்லவில்லை. ஆனால் இறுதியில் ஜெயித்து விட்டது. (டாஸில் வெல்லவில்லை என்பதைக் குறிப்பிட்டோம்).

இறுதிப் பந்தயத்தில் முதுகில் காயம் பட்ட கங்குலி 'யூ டூ ப்ரூட்டஸ்?' என்று கதறவில்லை. ஸ்ட்ரெச்சரில் படுத்தபடி மைதானத்தைவிட்டு வெளியேறினாலும், 'சாம்சங் கோப்பை'யைப் பெற்றுக் கொள்ள மனிதர் டாணென்று வந்து விட்டார்.

"எங்களிடம் சோஹிப் அக்தர் இருக்கிறார். இந்திய அணியில் அந்தத் தரத்துக்கு அருகில் வர யாரும் இல்லை. இர்பான் பத்தான் போன்ற பந்து வீச்சாளர்கள், எங்கள் பாகிஸ்தானில் சந்துக்கொருவர் உண்டு'' என்றெல்லாம் சவடால் பேசிய ஜாவேத் மியாண்டாடின் மூக்கில் இந்நேரம் ப்ளாஸ்திரி இருக்கும். 'ராவல்பிண்டி எக்ஸ்பிரஸுக்கு (அதுதான் சோஹிப் அக்தரின் செல்லப் பெயர்) இந்திய பந்துவீச்சாளர்கள் குறைவில்லை என்பதை நிரூபித்தார்கள்.

அரசியல் ஒருபுறமிருக்க, 'இந்தியா ஒளிர்கிறது' என்பது கிரிக்கெட்டுக்கு நன்றாகவே பொருந்துகிறது. பல சாதனைகள் முறியடிக்கப்பட்டன. என்றாலும், தொலைக்காட்சி நோக்கர்களால் கெயிப் மற்றும் பாலாஜியின் 'பேட்'கள் பாதி ஆட்டத்தில் முறிந்துபோன காட்சியை எளிதில் மறக்க முடியாது.

'பதினொரு ஆட்டக்காரர்களால் வெல்ல முடியும்போது, நூறு கோடி இந்தியர்களால் இதைச் சாதிக்க முடியாதா?' எனும் வாஜ்பாய் சாமர்த்தியமாக 'பந்தயங்களோடு மனங்களையும் வென்று வந்திருக்கிறார்கள்' என்றார்.

இந்திய கிரிக்கெட் கட்டுப்பாட்டுக் குழுவின் தலைவர் ஜக்மோகன் டால்மியா 'சின்ன போனஸ் தருகிறோம்' என்றபடி, இந்திய அணிக்கு அதிகப்படியாக ஐம்பது லட்ச ரூபாய் அளிக்கப்படும் என்று அறிவித்திருக்கிறார். 'விளம்பர ஆட்டக்காரர்களைப்' பொறுத்தவரை இது சின்னத் தொகைதான்.

'மேட்ச் ஃபிக்ஸிங்' என்ற கேள்விக் குறியையும் மீறி 'கெலிச்சுட்டோம்ல!' என்று பட்டாசு வெடித்துத் தள்ளி, இன்னொரு தீபாவளியைக் கொண்டாடியது மகிழ்ச்சியே!

- ஜி.எஸ்.எஸ்.

பேராசிரியர் ப. இராம்கோபால்

மார்க் வாங்கலாம் வாங்க! 12

# படம் பாருங்க; படம் போடுங்க!



ஒரு ஞாயிற்றுக் கிழமை... மாலை மணி ஆறு... ஊரை விட்டுச் சற்றே தள்ளியிருக்கும் ஒற்றை வீடு... தொலைக் காட்சியில் 'இந்தியத் தொலைக் காட்சி வரலாற்றில் முதன்முறையாக, திரைக்கு வந்து ஒரு சில வாரங்களேயான, புத்தம் புதிய தமிழ்த்திரைப்படம்' ஓடிக் கொண்டிருக்கிறது. வீட்டிலுள்ள அனைவரும் அதனுடன் ஒட்டிக் கொண்டிருந்தார்கள். திறந்திருக்கும் பின்புறக் கதவு வழியாகத் திருடன் நுழைகிறான். அகப்பட்டதைச் சுருட்டிக் கொண்டு கம்பி நீட்டுகிறான்.

இது எதுவும் வீட்டிலுள்ளவர்களுக்குத் தெரியவில்லை. காட்சியின் வண்ணமும், இசையின் வளமும் அப்படி. சிறிது நேரத்தில் வருகிறது மின் தடங்கல். இப்பொழுதுதான் எல்லோருக்கும் கொஞ்சம் கொஞ்சமாய் சுரணை வருகிறது. கைவிளக்கு எடுத்து வர படுக்கையறைக்கு ஓடுகிறான் சுட்டிப்பயல் நந்து. "அம்மா!" என்று அலறுகிறான்.




எல்லோரும் பதறியடித்துக் கொண்டு ஓடி வர, படுக்கையறை அவர்களை வரவேற்கிறது, திறந்து கிடக்கும் பீரோவுடன்.

நம்மை 'மெய் மறக்க'ச் செய்ய தொலைக்காட்சியால் எப்படி முடிகிறது? இந்தக் கேள்விக்கு விடை தெரிய, மூளையில் தகவல்கள் எப்படிப் பதிவாகின்றன என்பதை முதலில் தெரிந்து கொள்வோம். தகவல்கள் அனைத்தும் மூளையில் படங்களாக - காட்சிகளாகத்தான் பதிவாகின்றன. உதாரணமாக, 'ரோஜாக்கூட்டம்' என்ற சொற்களை நம் கண்கள் படிக்கும் (பார்க்கும்)போது, நம் மூளையில் வண்ணங்கள் பல கொண்ட பல்வகை ரோஜாச் செடிகளின் தோற்றம் தோன்றுகிறது. அரிஸ்டாடில் 'in order to think you've to speculate in images' என்று சொல்கிறார். எந்த ஒரு விஷயத்தையும் படங்களாகத்தான் சிந்திக்க முடியும் என்பது இதன் பொருள். உலகின் மிகச் சிறந்த கண்டுபிடிப்பாளரான தாமஸ் ஆல்வா எடிசன் சொல்கிறார். "என்னுடைய கண்டுபிடிப்புகளை நான் முதலில் சித்திரங்களாகத்தான் சிந்தித்தேன்!"

இப்படி மூளைக்கு அனுப்பப்படும்





படங்கள் பல வண்ணங்கள் கொண்டவையாகவும், பற்பல வடிவங்களுடனும் இருந்தால், அவை மூளையில் வேகமாகவும், ஆழமாகவும் பதிவாகின்றன. இந்தப் பதிவின் வேகத்திற்கும், ஆழத்திற்கும் ஏற்றவாறு சூழ்நிலையை நாம் மறக்கிறோம். தொலைக்காட்சி நம்மைக் கட்டிப் போடுவதும் இப்படித்தான்.

"தொலைக்காட்சி என்னைக் கட்டிப் போடுகிறது. சரி! ஆனால் பாடம் என்னை விரட்டுகிறதே!" என்கிறீர்களா? பாடமும் உங்களைக் கட்டிப் போடும், அதன் காலை வாரி விட்டால்! (அதாவது 'பாடம்' - 'ா'= படம்) ஆம்! உங்கள் கற்பனைக் குதிரையைத் தட்டி விட்டு, பாடங்களைப் படங்களாக மாற்றுங்கள். அவற்றை அப்படியே மூளைக்கு அனுப்புங்கள். அவ்வளவுதான்! பிரச்னை தீர்ந்தது!

**பா**டங்களைப் படங்களாக மாற்றும் இந்த வித்தையைக் 'காட்சிப் படுத்துதல்' என்று அழைப்போம். இதைச் செய்ய முதலில் ஒரு பாடத்தை எடுத்துக் கொண்டு, அதில் என்னென்ன தகவல்கள் இருக்கின்றன, அவை எப்படி ஒன்றுடன் ஒன்று சம்பந்தப்பட்டிருக்கின்றன என்று ஆராய வேண்டும்.

அதன் பிறகு:

1. படித்த விஷயங்களை ஒரு rough sketch ஆக மனத்தில் வரைந்து கொள்ள வேண்டும்.

2. இந்த 'மன ஓவியத்தை' ஒரு கோட்டோவியமாக (line-drawing) ஒரு பென்ஸிலால், ஒரு தாளில் வரைந்து கொள்ள வேண்டும்.

3. அடுத்ததாக, கற்பனையை வேகமாகப் பாய விட்டு, இந்தக் கோட்டோவியத்தை ஒரு வண்ண ஓவியமாக மாற்ற வேண்டும்.

இப்போது கண் முன்னே இருப்பது, யாரோ எழுதிய உப்பு சப்பற்ற பாடம் அல்ல; அது ஓர் உயிர்த்துடிப்பு மிக்க, ஜீவனுள்ள படம். அதை எழுதியது வேறு யாருமல்ல; நீங்கள்தான்! உங்கள் ப(ா)டத்தைப் பார்த்து நீங்கள் பெருமிதம் கொள்ளலாம், 'நான் பெற்ற செல்வம்!' என்று. அருகில் யாரும் இல்லையெனில், 'சித்திரம் பேசுதடி, என் சிந்தை மகிழுதடி!' என்று பாடி ஆடலாம்.

**பா**டம் படமாக மாறும்போது, உங்களுக்கும் பாடத்திற்கும் இடையேயுள்ள 'தூரம்' குறைந்து நெருக்கம் அதிகமாகிறது. மனச்சோர்வு மறைகிறது. என்ன படம் போடலாம், எந்தெந்த வண்ணங்களை, எங்கெங்கு பயன்படுத்தலாம் என்ற கற்பனை எழும்போது, பாடத்தைப் பற்றி நீங்கள் மீண்டும் மீண்டும் சிந்திக்கிறீர்கள். Repetition விதிப்படி பாடம் ஆழமாகப் பதிவாகிறது.

ஒரே விஷயத்தைப் பல்வேறு கோணங்களில் சிந்திப்பதால், சிந்திக்கும் திறன் பட்டை தீட்டப்படுகிறது.

"ஐயோ! எனக்குப் படம் போட வராதே!" என்று அலறாதீர்கள். தைரியமாக வரைய ஆரம்பியுங்கள். நீங்கள் வரைவது போட்டிகளில் கலந்து கொண்டு பரிசுகளைத் தட்டிச் செல்ல அல்ல; பரீட்சைகளில் கடைத்தேறவே! எனவே, அச்சமின்றி, ஆர்வத்துடன் வரைய ஆரம்பியுங்கள்.

ஓர் உதாரணம்:

கனிம வேதியலில் 'பென்ஸீன்' ஒரு முக்கியமான, அதேசமயம் வினோதமான அமைப்பு (structure) கொண்ட வேதிப் பொருள். இதன் அமைப்பை நினைவில் வைத்துக் கொள்ள, தன் வாலையே தன் வாய்க்குள் கவ்விக் கொண்டிருக்கும் ஒரு பாம்பின் படத்தைக் கற்பனை செய்து கொள்ளுங்கள். அடுத்ததாக, இந்த வித்தியாசமான பாம்பு பரமசிவன் கழுத்தில் தொங்குவதாகக் கற்பனை செய்து கொள்ளுங்கள்.

இனி பாம்பின் படத்தைப் பார்க்கும் போதெல்லாம் 'பென்ஸீன்' ஞாபகம் வரும்!

பார்க்க படம்....

இந்த உதாரணம், "ப்பூ! இவ்வளவு தானா விஷயம்! பென்ஸீன் - பாம்பு - பரமசிவம் இதெல்லாம் ரொம்ப ஸிம்பிளான சமாச்சாரம்! என்ன பிரமாதம்!" என்கிறீர்களா? கொஞ்சம் பொறுங்கள். இது முடிவல்ல; ஆரம்பம்தான்.

(தொடரும்)

# மார்க் போடு தலைவா!

**எ**ல்லா மாண்புமிகுக்களுக்கும் மார்க் போட்ட தங்கத் திருக்கரத்தாலே, நம்ம ராகுல் காந்திக்கும் மதிப்பெண் போடுமாறு, வாசக அன்பர்களைக் கேட்டுக் கொள்கிறோம்.

உங்க மதிப்பில் ராகுல் காந்தி எப்படி? 'நறுக்'னு கச்சிதமா கணிச்சு, அனுப்பி வையுங்க. முழு முகவரி முக்கியம். சிறந்த முறையில் மதிப்பெண் போட்டவங்களுக்கு டிக்கெட் தரப்படும். நான்கு பேர் அடங்கிய குடும்பத்துக்கு சினிமா டிக்கெட். உறையின் மீது 'மாண்புமிகு டாப்டென் - 10 என்று குறிப்பிடவும்.

ஆசிரியர் தீர்ப்பே இறுதியானது.

**கடைசி தேதி: 11.4.2004**




# புதுமுகமே வருக!

| | தகுதி | முழு மதிப்பெண் | ராகுல் காந்தி பெற்றது |
|---|---|---|---|
| 1. | தலைமைப் பண்பு (லீடர்ஷிப் குவாலிடி, வசீகரம்) | 10 | |
| 2. | முடிவெடுக்கும் திறன் | 10 | |
| 3. | கறைபடாத கரங்கள் | 10 | |
| 4. | அரசியல் சாணக்கியம் | 10 | |
| 5. | மனித நேயம் | 10 | |
| 6. | தொண்டர்களோடு தோழமை | 10 | |
| 7. | மேடைப் பேச்சு | 10 | |
| 8. | மாற்றுக் கட்சியினரை மதிக்கும் போக்கு | 10 | |
| 9. | தனிமனித ஒழுக்கம் | 10 | |
| 10. | நிர்வாகத் திறமை | 10 | |
| | மொத்தம் | 100 | |

மாண்புமிகு டாப் டென் - 10

பெயர் ..............................

முகவரி ..............................

..............................

..............................




# ஆதி முடிச்சு

முடிச்சுகளில் தொடங்குகிறது
வாழ்க்கை.
உலகம் முடிச்சுகளின்
பட்டறை.

முடிச்சுகளற்று வாழ்க்கை
இருக்கக் கூடாதாவென்று
எல்லோரும் ஏங்குகிறார்கள்
மேலும் முடிச்சுகள் விழும்போது.

எல்லா முடிச்சையும்
அவிழ்க்க நினைப்பவனுக்கு
முதல் முடிச்சை
அவிழ்த்தால் போதுமென்று
குறுக்கு வழியில்
முடிச்சிடுகிறது ஞானம்.

ஆதி முடிச்சு,
தேடுபவனின்
விழியிமையிலோ
நேற்றிரவின் முடிச்சு.

ஆதி முடிச்சு,
அவிழ்க்கு மெண்ணம்
அதீத முடிச்சாக

அவிழ்த்து முடிச்சவனோ
அலட்சியமாய்ச் சொல்லுகிறான்
ஒன்றுமில்லையென்று.

**- வேதான் வினோத்பாபு**




# கதவு சார்த்தல்

ஒரு வீட்டின்
கதவு சார்த்தலில்
எவ்வளவோ உள் அர்த்தம் இருக்கிறது

'உன்னை ரொம்பப் பிடித்திருக்கிறது'
'உன் சகவாசமே வேண்டாம்'
'இனி இந்த வீட்டுப் பக்கம் வராதே'
'நீ அடிக்கடி வருவதால் நாங்கள்
சந்தோஷமடைகிறோம்'
'போய்வா.'

நானும் வீதிக்கு
வந்துவிட்டேன்.
கதவிடுக்கில் நசுங்கிய
மனம்தான்
இன்னும் வலித்துக் கொண்டிருக்கிறது.

**- நக்ஷத்ரா**





• ஸ்ரீ சிவசுப்ரமணியர்

# பிரம்மனாக மாறிய முருகன்!

• அஞ்சலி வரத ஆஞ்சநேயர்

"நாலு தலைதானா முருகனுக்கு? அப்புறம் அஞ்சுதலையார் தீர்க்கறது? ஆறுதலை யார் கொடுக்கிறது? சரியாச் சொல்லுங்க, நாலுதானா?"

- கேட்டுக் கொண்டேதான் டூரிஸ்டுகள் வருகிறார்கள். சின்னாளம்பட்டி ஸ்ரீ சிவசுப்ரமணியர் கோயிலுக்கு வந்த பிறகுதான் புரிகிறது. இங்கே இருக்கற முருகன், பிரும்மாவை 'படைத்தல் புரோக்ராமுக்கான கோட் 'ஓம்'க்கு அர்த்தம் தெரியாததால், 'டெஸ்மா' சட்டத்தில் டிஸ்மிஸ் செய்துட்டு, தானே பிரும்மனாக மாறி படைக்க ஆரம்பிச்சுட்டார். அதற்கான அடையாளம்தான் சின்னாளம்பட்டி நான்முக முருகன் கோயில். குமாரசாமி செட்டியார் தொடங்கி வைத்து நின்று போய், மீண்டும் அறுபது ஆண்டுகள் கழித்து, அவரது பேரன் டி.எஸ். குமாரசாமி செட்டியாரால் கட்டி முடிக்கப்பட்ட கோயில்.

அருகில் அஞ்சலி வரத ஆஞ்சநேயர் கோயிலும் இருக்கிறது. கம்பீரத்துக்கு இன்னொரு பெயரே ஆஞ்சநேயர்தான். பதினாறு அடி உயரத்தில் கன கம்பீரமாக நிற்கிறார். இவரை தை மாதத்தில் பார்க்க வேண்டும். சந்தனக்காப்பு, ஐம்பொன் காப்பு போல, கரும்புகளை அடுக்கி காப்பிட்டிருப்பார்கள்.

எந்த நல்ல காரியமானாலும் சரி, இந்த முருகனுக்கும், ஆஞ்சநேயனுக்கும் வேண்டிக்கிட்டா போதும். கவலைய மறந்துட்டு அடுத்த வேலையைப் பார்க்கப் போயிடலாம். செவ்வாய் தோஷக் காரங்களா, இந்தச் செவ்வேளை வந்து பார்த்தாப் போறும். அடுத்த வேளையே நல்ல வேளைதான். கடன் தொல்லையா? கந்து வட்டியா? கஷ்டமா? இங்கே வந்து போனா, கரைஞ்சே போயிடும்.

சேலைக்கும் துணிக்கும் பிரசித்தியான ஊர், வேலைத் தூக்கிய முருகனாலும், வாலைத் தூக்கிய ஆஞ்சநேயனாலயும் மேலும் விசேஷமாகிறது.

– மல்லிகா அழகர், சின்னாளம்பட்டி

# சோ எழுதிய மஹாபாரதம் பேசுகிறது

– இரண்டு பாகங்கள்

ரூ. 500/–

## 'சோ'வின் பிற நூல்கள்

| | | |
|---|---|---|
| 1. | உண்மையே உன் விலை என்ன | 37.00 |
| 2. | கூவம் நதிக் கரையினிலே - பாகம் - 2 | 45.00 |
| 3. | கூவம் நதிக் கரையினிலே பாகம் - 3 | 27.00 |
| 4. | துக்ளக் படமெடுக்கிறார் | 30.00 |
| 5. | சம்பவாமி யுகே! யுகே! | 30.00 |
| 6. | சாதல் இல்லையேல் காதல் | 41.00 |
| 7. | வெறுக்கத்தக்கதா பிராமணீயம் | 30.00 |
| 8. | எங்கே பிராமணன்? | 85.00 |
| 9. | துக்ளக் கேள்வி - பதில் - I | 24.00 |
| 10. | துக்ளக் கேள்வி - பதில் - II | 45.00 |
| 11. | சாத்திரம் சொன்னதில்லை | 30.00 |
| 12. | அதிகப்பிரசங்கம் | 32.00 |
| 13. | துக்ளக் தலையங்கங்கள் | 25.00 |
| 14. | யாருக்கும் வெட்கமில்லை | 28.00 |
| 15. | இன்பக் கனா ஒன்று கண்டேன் | 14.00 |
| 16. | இந்தியா எங்கே போகிறது? | 12.00 |
| 17. | மனம் ஒரு குரங்கு | 30.00 |
| 18. | இந்து தர்மம் | 50.00 |
| 19. | காமராஜை சந்தித்தேன் | 33.00 |

## கவிஞர் வாலி இயற்றிய

# புலனடக்கத்தின் பொன்விழா

ஜயேந்திரரின் ஜன்ம சரிதம் - ஜனனம் முதல் ஜகத்குரு வரை

விசிஷ்டாத்வைதியின் பார்வையில்

## அத்வைத மகான்

(ஜெயகாந்தன் முன்னுரையுடன் மிக மிக உயர்தரமான தயாரிப்பு)

ரூ.100/- மட்டும்

## உலக இலக்கிய வரிசை

தமிழில்: சிவன்

| | | | |
|---|---|---|---|
| 1. | சித்தார்த்தன் | - ஹெர்மன் ஹெஸ் | 35.00 |
| 2. | ஏழை படும் பாடு | - விக்டர் ஹியூகோ | 40.00 |
| 3. | ராபின் ஹூட் | - மேத்யூ ஹூக் | 45.00 |
| 4. | கரமசோவ் சகோதரர்கள் | - தஸ்தயெவ்ஸ்கி | 35.00 |
| 5. | ராபின்ஸன் குடும்பம் | - யோஹன் டேவிட் வைஸ் | 32.00 |
| 6. | இலியட் | - ஹோமர் | 45.00 |
| 7. | ஒடிஸி | - ஹோமர் | 30.00 |
| 8. | பிரபு மான்டி கிறிஸ்டோ | - அலெக்ஸாண்டர் டூமாஸ் | 37.00 |
| 9. | டாம்சாயர் | - மார்க் ட்வைன் | 37.00 |
| 10. | அதிசய உலகில் ஆலிஸ் | - கரோல் லூயிஸ் | 45.00 |
| 11. | ராபின்ஸன் குரூசோ | - டேனியல் டீஃபோ | 48.00 |
| 12. | மோபிடிக் | - ஹெர்மன் மெல்வில் | 45.00 |
| 13. | கலிவரின் பயணங்கள் | - ஜோனாதன் ஸ்விஃப்ட் | 40.00 |
| 14. | அன்னகரெனினா | - லியோ டால்ஸ்டாய் | 35.00 |
| 15. | போரும் அமைதியும் | - லியோ டால்ஸ்டாய் | 32.00 |
| 16. | புதையல் தீவு | - ஆர்.எல். ஸ்டீவென்ஸன் | 42.00 |
| 17. | இழந்த உலகம் | - ஆர்தர் கானன்டாயல் | 32.00 |
| 18. | பிராங்கென்ஸ்டைன் | - மேரி ஷெல்லி | 40.00 |
| 19. | ஹெய்டி | - ஜோஹன்னா ஸ்பைரி | 30.00 |

## பி. ஸ்ரீ. ஆச்சார்யா எழுதிய

1. ஆழ்வார்கள் வரலாறு (8 தொகுதிகள்) — ரூ. 306.00
2. அறுபடை வீடுகள் (6 தொகுதிகள்) — ரூ. 210.00
3. திவ்யப் பிரபந்த ஸாரம் — ரூ. 60.00

மற்றும்

4. அருணகிரிநாதரின் வாழ்க்கை வரலாறு — ரூ. 30.00
5. கந்த புராணக் கதைகள் — ரூ. 40.00
6. நாரதர் கதை — ரூ. 25.00
7. நவராத்திரியின் கதைகள் — ரூ. 23.00
8. ராஜரிஷி விசுவாமித்திரர் — ரூ. 30.00
9. தசாவதாரக் கதைகள் — ரூ. 32.00

1. மஹரிஷிகள் வரலாறு – A.V. சுகவனேசுவரன் – 65.00
2. வேதம் வணங்கும் தெய்வங்கள் – 62.00
3. இந்துமத நன்னெறிகளும் சம்பிரதாயங்களும் – கிருஷ்ணசாமி – 50.00

அன்றாட வாழ்வில் பகவத் கீதையின் பயன்பாட்டை விளக்குவது

## கண்ணன் சொற்படி வாழ்வதெப்படி? ரூ. 50/–

பேராசிரியர் 'பிலானி' வி. கிருஷ்ணமூர்த்தி



அல்லயன்ஸ் கம்பெனி

(நூற்றாண்டு கண்ட முதல் தமிழ்ப் புத்தக நிறுவனம்)

244, ராமகிருஷ்ணா மடம் சாலை, மயிலாப்பூர்

சென்னை – 600 004. ✆: 24941314

# வீட்டுச் சிறைக்குள்

## சென்னை, திருவான்மியூர்.

இரவு பதினொரு மணி. பன்னிரண்டு வயது அஜய்குமாரைப் பிடித்து வெளியே தள்ளி, கதவை மூடினார்கள். "ஒழிந்து போ!" என்று ஹிந்தியில் சபித்தபடியே இந்தச் சிறுவனை விரட்டி அடித்தவர்கள், அவன் வேலை செய்து வந்த வீட்டின் உரிமையாளர்களான மார்வாடிகள். தமிழ் தெரியாது, தெரிந்த முகங்கள் கிடையாது, சென்னை பரிச்சயம் இல்லை. ஆனாலும் அந்த நடு இரவில் அஜய்குமாருக்கு விடுதலை கிடைத்த நிம்மதி. கொல்லும் பசியோடு அந்த உயர்தட்டு நடுத்தர வர்க்கத்தின் அடுக்குமாடிக் குடியிருப்பிலிருந்து வெளியேற முயன்றவனைத் தடுத்து உணவு கொடுக்கிறார்கள், அதே குடியிருப்பில் வசித்து வரும், சீனிவாசனும் அவரது மனைவியும். சீனிவாசன் திருவான்மியூரில் செயல்பட்டுவரும் 'புதுவெள்ளம்' சமூக அமைப்பின் செயல் பிரதிநிதி. மறுநாள் காலை சீனிவாசன் தமக்குத் தெரிந்த பத்திரிகை நிருபர் ஆனந்துக்குத் தகவல் தருகிறார்.




• லோகேஷ், ரபேக்காவின் நட்பு

பீஹார் மாநிலம், பகல்பூர் மாவட்டத்தில் உள்ள ஜெகநாத்பூரைச் சேர்ந்தவன் இந்த அஜய். அந்த ஊரின் வட்டார ஹிந்தி மொழியில் அஜய்யுடன் செய்தியாளர் ஆனந்த் பேச, அந்தப் பிஞ்சு உள்ளத்திற்கு இழைக்கப்பட்ட கொடுமைகள் வெளியே தெரிய வருகின்றன.

மாதம் ஐந்நூறு ரூபாய் என்ற ஒப்பந்தத்தில் வீட்டு வேலைக்காக அழைத்து வரப்பட்டவன். அந்தக் குடும்பத்தின் மூன்று சிறுவர், சிறுமியரை கவனித்துக் கொள்ளுதல், சமைத்தல், துவைத்தல், வீட்டைச் சுத்தப்படுத்துதல், மளிகைச் சாமான் வாங்கி வருதல் என்று, ஓய்வு ஒழிச்சல் இல்லாத வீட்டு வேலைகள். ஆனால் இவனுக்குத் தருவதாக ஒப்புக் கொள்ளப்பட்ட ஐந்நூறு ரூபாய் ஊதியத்தை அவனிடமும் தரவில்லை, அவனது பெற்றோருக்கும் அனுப்பி வைக்கவில்லை. இது ஒரு புறம் இருக்க, வீட்டு உரிமையாளரின் வாண்டுகள் இவனுக்குக் கொடுத்த துன்பங்கள், அவனை விரக்தியின் எல்லைக்கே கொண்டு போனதுதான் கொடுமை! அவனது உடைகளைக் களைந்து, நிர்வாணமாக்குவது, சினிமா சண்டைக் காட்சிகளைப் பார்த்து, அதைப் போலவே திடீர், திடீரென்று ஓடி வந்து தாக்குவது, குளியலறையில் நீண்ட நேரம் அடைத்து வைப்பது, என துன்பங்கள் தொடர்ந்திருக்கின்றன. இவற்றைப் பலமுறை வீட்டுப் பெரியவர்களிடம் அவன் சொல்லியிருக்கிறான். ஆனால் அவனது எதிர்ப்புக் குரலுக்காக

• நேசக்கரத்தில் அஜய்...

# வேகும் தளிர்கள்!



• ஆனந்த்

அவர்களும் தாக்கியும், பட்டினி போட்டும் தண்டித்திருக்கிறார்கள். ஒரு கட்டத்தில் அவனுக்கு நாப்தலின் உருண்டைகளைப் போட்டு சாப்பாடு தர, பொங்கி எழுந்தவனை நள்ளிரவு என்று கூடப் பாராமல், வீட்டிலிருந்து வலுக்கட்டாயமாக வெளியேற்றி இருக்கிறார்கள்.

அஜய்க்கு நீதி கேட்டு காவல் நிலையத்தை அணுகியபோது, பெருத்த ஏமாற்றம்! அவனை வீட்டு உரிமையாளர்கள் தாக்கியதற்கான காயமோ, தழும்போ அவனது உடலின் மேற்புறத்தில் தெரிந்தால்தான், புகாரை ஏற்க முடியும் என்று மறுத்து விட்டனர் போலீசார். "குழந்தைத் தொழிலாளர் தடுப்புச் சட்டத்தின் கீழ் புகார் தரலாம் என்றால், வீட்டு வேலைக்காக குழந்தைத் தொழிலாளர்களைப் பயன்படுத்துவதை இந்தச் சட்டம் எதிர்க்கவில்லை' என்று நிராகரித்து விட்டார்கள்" என்கிறார் பத்திரிகையாளர் ஆனந்த். ஏன் சட்டத்தில் இத்தனை பாரபட்சம்? மூத்த வழக்கறிஞர் சந்துரு சொல்கிறார்:



• சந்துரு

"1986ல் கொண்டு வரப்பட்ட குழந்தைத் தொழிலாளர் சட்டம், பதினான்கு வயதுக்கு உட்பட்ட சிறார்களை தொழிற்சாலைகளில் வேலைக்கு அமர்த்தக் கூடாது என்று சொல்கிறது. தவிர, ஆபத்தான எந்த வேலைக்கும் குழந்தைகளைச் சேர்த்துக் கொள்ளக் கூடாது என்று அறுதியிட்டுச் சொல்கிறது. ஆனால் வீட்டு வேலை செய்யும் குழந்தைத் தொழிலாளர் பற்றி மூச்சு விடவில்லை. ஆபத்தான வேலை என்று சொல்வதே அபத்தமான சட்டம். நான்கு



• ஃபாதர் ஜேசு

சுவர்களை விட்டு வெளியே வரமுடியாமல், தரமான உணவு இல்லாமல், வீட்டு உரிமையாளர்களின் மிரட்டலுக்கும், தாக்குதலுக்கும் இலக்காகி, மனநல பாதிப்புக்கு ஆளாகிறார்கள். இது எத்தனை பெரிய ஆபத்து. எனவே குழந்தைத் தொழிலாளர் சட்டத்தை உடனடியாகத் திருத்தம் செய்து, அதில் தொழிற்சாலைப் பணிகளுடன் 'டொமஸ்டிக் சைல்டு லேபர்' என்பதும் உடனடியாகச் சேர்க்கப்பட வேண்டும்" என்கிறார்.

"தாங்கள் வேலை செய்யும் வீடுகளிலிருந்து தப்பித்து, சொந்த ஊருக்கோ, அல்லது வேறு புதிய இடத்துக்கோ போய்விடலாம் என்ற எண்ணத்தோடு இவர்கள் வந்து சேருவது ரயில்வே நிலையங்கள். அதனால்தான் தெற்கு ரயில்வேயுடன் போராடி அனுமதி பெற்று, எழும்பூர் ரயில் நிலையத்தில் இப்படி வரும் சிறார்களைக் கண்காணித்து மீட்க, 'நேசக்கரம்' சார்பில் மையம் அமைத்திருக்கிறோம்" என்கிறார் 'நேசக்கரம்' இல்லத்தை நடத்தி வரும் அருள் திரு. ஜேசு.

அஜய்குமார் இப்போது அடைக்கலம் புகுந்திருப்பது நேசக்கரத்தில்தான். அவனைப் போலவே வீட்டு வேலையிலிருந்து வெளியேற்றப்பட்ட லோகேஷ், ரபேக்கா இருவரும் மொழி புரியாத நிலையிலும், இங்கே அவனோடு தோழர்களாகி விட்டிருக்கிறார்கள். அவர்களைப் போலவே விரைவில் பள்ளிக்குப் போகப் போகிறான் அஜய். ஆனால், கண்ணுக்குத் தெரியாத அஜய்கள், படித்தவர்களின் வீடுகளிலும் கூட, வீட்டு வேலைச் சுமையிலும் கொடுமையிலும், துன்புறுத்தல்களோடு அழுது கொண்டிருக்கிறார்கள். இப்போதைய தேவை சட்டத் திருத்தம் என்றாலும், குறைந்த பட்சம் படித்த மேல்தட்டு வகுப்பாவது, குழந்தைத் தொழிலாளர்களை வீட்டு வேலைக்கு வைத்துக் கொள்வது குற்றம் என்பதை உணர வேண்டும்.

கட்டுரை, படங்கள்:
**ஆர்.சி.ஜெயந்தன்**

# கோடி கோடி மின்னல்கள்

ராஜேஷ்குமார்

**வை**கை ஆதித்யாவோடும், அர்ச்சனாவோடும் வாணி நர்ஸிங்ஹோமுக்குப் போய்ச் சேர்ந்தபோது, சீஃப் டாக்டர் ஐ.ஸி. யூனிட்டுக்குள் இருந்தார். பார்வைக்குக் கிடைத்த ஸ்டாஃப் நர்ஸை நிறுத்தினாள் வைகை.

"சிஸ்டர்... இப்போ இளஞ்செழியனோட நிலைமை எப்படியிருக்கு...?"

"காலையிலிருந்து நாலஞ்சு தடவை ப்ளட் வாமிட் பண்ணிட்டார். உடனடியா ப்ளட் கொடுத்துப் பார்த்தோம். உடம்பு ஏத்துக்கலை. பல்ஸ் ரேட் சரியில்லை. ரத்த அழுத்தமும் தாறுமாறா இருந்தது. மறுபடியும் ஐ.ஸி.க்கு கொண்டு போக வேண்டியதாயிடுச்சு... சீஃப் டாக்டர் கொஞ்ச நேரத்துல வெளியே வருவார். கேட்டுக்கங்க..."

மூன்று பேரும் ஐ.ஸி. யூனிட்டுக்கு வெளியே இருந்த ஆரஞ்சு வண்ண பாலிமர் நாற்காலிகளில், இறுக்கமான முகங்களோடு உட்கார்ந்தார்கள். ஆதித்யா தன்னுடைய நெற்றியைத் தேய்த்துக் கொண்டு கோபத்தோடுப் பொருமினான்.

"தப்புப் பண்ணிட்டீங்க வைகை..! தமிழ்நாட்டிலேயே நம்பர் ஒன் ஹாஸ்பிடல் நம்முடைய ஹன்ஸா ஹாஸ்பிடல். அந்த ஹாஸ்பிடலுக்கு நீங்க அஸிஸ்டெண்ட் அக்கௌண்ட்ஸ் ஆபீஸர். நீங்க எந்த ஒரு காரியத்தைப் பண்ணினாலும், அதுல புத்திசாலித்தனம் இருக்கறதைக் கண்கூடாப் பார்த்துட்டிருக்கேன்... அப்படிப்பட்ட உங்களுக்கு இளஞ்செழியனை ட்ரீட்மெண்ட்டுக்காக நம்ம ஹாஸ்பிடலுக்குக் கொண்டு வரணும்னு ஏன் தோணலை?"

"இங்கே இருக்கிற சீஃப் டாக்டர்தான் ரெண்டு நாள் போகட்டும். அப்புறமா ஹன்ஸாவுக்குக் கொண்டு போயிடலாம்னு சொன்னார்..."

"அவர் சொல்லிட்டா... அது வேத வாக்கா..? ஸாரி மிஸ் வைகை! ஐ குட் நாட் கண்ட்ரோல் மை ஃபீலிங்க்ஸ்.. உங்க விஷயத்தில் நான் அதிக உரிமை எடுத்துக்கிறதா நீங்க நினைக்கக் கூடாது..."

வைகை பதில் பேசும் முன், அவளுடைய செல்ஃபோன் ரிங்டோனை வெளியிட்டது. எடுத்து காதுக்கு ஏற்றினாள். மறுமுனையில் அவளுடைய தங்கை யமுனா பேசினாள்.

"அக்கா... கங்கிராட்ஸ்..."

"கங்கிராட்ஸா... எதுக்கு...?"

"உனக்கு அவார்டு கிடைச்சிருக்கு."

"அவார்டா...?"

"ஆமாக்கா... பெண்களுக்கான 'மஹிமா உன்னதி' அவார்ட். 'சன் நியூஸ்'ல இப்பத்தான் சொன்னாங்க... எதேச்சையா சேனல் மாத்தும்போது, உன்னோட போட்டோவைக் காட்டி அவார்ட் கிடைச்சதைப் பத்தி சொல்லிட்டிருந்தாங்க. 'மனசுக்குள் மழையா?' கவுன்சிலிங் மூலம் ஆயிரம் பேர்களை தற்கொலை முயற்சியிலிருந்து காப்பாற்றி அவங்க வாழ்க்கையில் மறுமலர்ச்சி உண்டாக்கிய சாதனைக்காக இந்த அவார்டாம். வெறும் அவார்ட் மட்டும் இல்லேக்கா... பத்து லட்ச ரூபாய் பரிசும் உண்டாம்..."

"........"

"நம்ம தெருவே இப்போ சந்தோஷத்




துல இருக்கக்கா!"

"..........."

"என்னக்கா... நான் பாட்டுக்கு பேசிட்டுப் போறேன். உன்கிட்டயிருந்து எந்த சந்தோஷ சிக்னலும் இல்லையே...?"

"வீட்டுக்கு வந்ததும் பேசிக்கலாம்..." மெல்லிய குரலில் சொல்லி, செல்ஃபோனை அணைத்தாள் வைகை. அவளுடைய முகத்தையே பார்த்துக் கொண்டிருந்த ஆதித்யா கேட்டான்.

"என்ன வைகை... போன்ல யாரு...? ஏதோ அவார்ட்டுன்னு சொல்லிட்டிருந்தீங்க... யாருக்கு அவார்ட்...?"

அந்த இக்கட்டான சூழ்நிலையில் விருது விஷயத்தைச் சொல்வதா, வேண்டாமா என்று சில விநாடிகள் யோசித்த வைகை, பின் இறுகிய முகத்தோடு சொல்லி முடித்தாள்.

"க்ரேட்!" என்றான் ஆதித்யா.

அர்ச்சனா உணர்ச்சி மேலிட்டு வைகையைக் கட்டிப் பிடித்துக் கொண்டாள். ஆதித்யாவை ஏறிட்டபடி சொன்னாள்.

"வைகைக்கு இந்த அவார்ட் கிடைக்க, இளஞ்செழியன் தன் பத்திரிகை 'மெட்டியோசை' சார்பா எடுத்துக்கிட்ட கடைசி நேர முயற்சிகள்தான் ஸார், காரணம்..."

"ஈஸிட்...?" ஆதித்யா தன்னுடைய வியப்பை வெளிப்படுத்திக் கொண்டிருக்கும்போதே -

ஐ.ஸி. யூனிட்டின் வெள்ளை பெயிண்ட் அடித்த கதவு, மெல்லத் திறந்தது. இரண்டு உதவி டாக்டர்களோடு, சீஃப் டாக்டர் வெளிப்பட்டார். வைகை கிட்டத்தட்ட டாக்டரை நோக்கிப் பாய்ந்தாள்.

"டாக்டர்... அவர் இப்போ எப்படியிருக்கார்...?"

"ஸ...ஸ...ஸாரிம்மா..."

"டா...டாக்டர்..."

"சிவியர் ப்ளட் வாமிட். எங்களால காப்பாத்த முடியலை. உயிர் பிரிந்து அஞ்சு நிமிஷமாச்சு."

வைகையின் பார்வை உறைந்தது.

**'வை**கையின் பார்வை உறைந்தது' என்கிற வாசகத்தோடு அந்த டயரி முடிந்து போயிருக்க, டயரியைப் படித்துக் கொண்டிருந்த டி.வி சீரியல் தயாரிப்பாளரான ரேணுகாதேவி, தனக்கு எதிரே உட்கார்ந்திருந்த சீரியல் டைரக்டர் முல்லைவாசனைப் பார்த்தாள்.

"உங்களுக்கு இந்த டயரி எப்படிக் கிடைச்சதுன்னு சொன்னீங்க...?"

"பழைய புத்தகக்கடைக்குப் போய், லக்ஷ்மி அம்மாவோட பழைய நாவல்கள் கிடைக்குமான்னு பார்த்துட்டிருந்தேன். புத்தகங்களுக்கு மத்தியில் இந்த டயரி கிடைச்சது. புரட்டிப் பார்த்தேன். ரெண்டு வருஷத்துக்கு முந்தைய டயரி. டயரியின் முதல் பக்கத்தில் எழுதப்பட்டிருந்த வரிகள், மனசை நெருடிப் பார்க்கவே வீட்டுக்குக் கொண்டு வந்து, படிச்சுப் பார்த்தேன். டயரியில் எழுதப்பட்டிருந்த சம்பவங்கள் என்னை ரொம்பவும் இம்ப்ரஸ் பண்ணவே, நீங்களும் படிச்சுப் பார்க்கக் கொண்டு வந்தேன்..."

"போன தடவை டெல்லியிலிருந்து வந்தப்ப கட்சிக்கு புது ரத்தம் பாய்ச்சணும்னு சொல்லிட்டுப் போனேனே, என்ன செஞ்சீங்க?"

"எந்த குருப் ரத்தம்னு சொல்லலியே, அதான் யோசிச்சிட்டிருக்கோம்!"

- நெல்லையப்பபுரம் செல்வன்

ரேணுகாதேவி டயரியின் முதல் பக்கத்துக்கு வந்தாள். பச்சை நிற ஸ்கெட்ச் பேனாவால் எழுதப்பட்ட வரிகள் பார்வையை நிறுத்தின.

***'அவளுடைய வாழ்க்கை ஒரு இருட்டு வானம். - அதில் கோடி கோடி மின்னல்கள். அந்த அற்பாயுள் மின்னல்களைக் காட்டிலும் - ஓர் அகல் விளக்கின் வெளிச்சம் நிரந்தரமானது என்று நினைத்தாள். நினைப்பு பொய்த்தது ஏன்...? விதியை கடவுள் கொஞ்சம் கண்டித்து வைக்க வேண்டும்.'***

"வெரி... இன்ட்ரஸ்டிங்... இந்த டயரியில் எழுதப்பட்டிருக்கிற உண்மையான சம்பவங்களை அடிப்படையா வெச்சுக்கிட்டே, ஒரு ஐந்நூறு எபிசோடுக்கு மெகா சீரியல் எடுக்கலாம் போலிருக்கே?"

"எடுக்கலாம் மேடம்...! ஆனா அதுக்கு முன்னாடி நாம வைகையை மீட் பண்ணணும்... வைகைக்கு வேண்டியவங்க யாரோ, இந்த டயரியை எழுதியிருக்காங்க. ரெண்டு வருஷத்துக்கு முந்தைய டயரிங்கிறதால பழைய புத்தகங்களோடு சேர்த்து எடைக்குப் போட்டிருக்கலாம். டயரியைப் பத்தி நாம வைகைகிட்டே எதுவுமே சொல்லக் கூடாது."

"எப்ப போலாம்...?"

"இப்பவே கிளம்பலாம் மேடம்..."

"சரி... அவகிட்டே என்ன பேசப் போறோம்?"

"சமூக சேவை செய்யற ஒரு பெண்ணை மையமா வெச்சு, சீரியல் ஒண்ணைப் பண்ணப் போறோம்... உங்க அனுபவங்களைச் சொன்னா, கொஞ்சம் உதவியாய் இருக்கும்னு சொல்லலாம்.



வைகை பார்க்க லட்சணமா காமிராவுக்கேற்ற போட்டோஜீனிக் ஃபேஸாக யிருந்தா, சீரியலில் நடிக்க வைக்கவும் முயற்சி செய்யலாம்..."

"கிளம்புங்க..."

ரேணுகாதேவி எழுந்தாள்.

அடுத்த ஒருமணி நேரத்தில் ஹன்ஸா ஹாஸ்பிடலின் வரவேற்பறையில், ரேணுகாதேவியும், முல்லைவாசனும் இருந்தார்கள். அரைவட்ட மேஜைக்குப் பின்னால், பாப் தலையோடு இருந்த ரிசப்ஷனிஸ்டிடம் விசாரித்தார்கள்.

"மிஸ் வைகையைப் பார்க்க முடியுமா...?"

"வைகை...?"

"எஸ்..."

"டாக்டர்...ஆர்...ஸ்டாஃப்...?"

"ஸ்டாஃப்..."

"எந்த செக்ஷன்...?"

"அக்கௌண்ட்ஸ்..."

"ஸாரி... அப்படி யாரும் அந்த செக்ஷனில் இல்லையே...!"

முல்லைவாசனும் ரேணுகாதேவியும், வியப்பாய் ஒருத்தரையொருத்தர் பார்த்துக் கொண்டார்கள்.

'ஒரு டயரியில் எழுதப்பட்டிருந்ததை உண்மை என்று நம்பிக் கொண்டு வந்தது தப்போ...?'

ரேணுகாதேவி தயக்கமாய் ரிசப்ஷனிஸ்ட்டை ஏறிட்டாள்.

"அக்கௌண்ட் செக்ஷன்ல அர்ச்சனான்னு யாராவது வேலை பார்க்கிறாங்களா?"

"ஸாரி... அந்தப் பேரிலும் யாருமில்லை..."

ரிசப்ஷனிஸ்ட் சொல்லிக் கொண்டிருக்கும்போதே அந்தப் பக்கமாய் நடந்து போன டாக்டர் ஒருவர் சட்டென்று நின்று, திரும்பிப் பார்த்தார். பிறகு பக்கத்தில் வந்தபடி கேட்டார், "பேர் என்ன சொன்னீங்க... அர்ச்சனாவா?"

"ஆமா..."

"அந்தப் பொண்ணு வேலையை ரிஸைன் பண்ணி, ஒன்றரை வருஷத்துக்கு மேல் இருக்குமே...? இவங்க புது ரிசப்ஷனிஸ்ட். வேலைக்குச் சேர்ந்து ரெண்டு மாசம் கூட ஆகலை. அதான் அர்ச்சனாவைப் பத்தி தெரியலை... டோண்ட் மிஸ்டேக் ஹர்..."

முல்லைவாசன் கேட்டார்.

"டாக்டர்! அதே அக்கௌண்ட் செக்ஷனில் வைகைன்னு ஒரு பொண்ணு...?"

"ம்... இருந்தாங்க... அவங்க ரெண்டு வருஷத்துக்கு முந்தியே வேலையை ரிஸைன் பண்ணிட்டாங்க."

"இப்ப எங்கே இருக்காங்கன்னு தெரியுமா டாக்டர்?"

"ஸாரி... தெரியலை..."

"அவங்க வீட்டு அட்ரஸ் கிடைக்குமா...?"

"நீங்க யாரு...?"

"டி.வி பீப்பிள்.... ! சமூக சேவையை மையமா வெச்சு ஒரு டி.வி சீரியல் பண்ணப் போறோம். அது சம்பந்தமா வைகைகிட்டே பேசணும்."

"ஒரு நிமிஷம்..." சொன்ன டாக்டர், அங்கேயிருந்த இன்டர்காமை உபயோகப்படுத்தி, ஹாஸ்பிடலின் எங்கோ ஒரு மூலையில் இருந்த பர்சனல் ஆஃபீஸரைத் தொடர்பு கொண்டார்.

"மிஸ்டர் ஸ்ரீகாந்த்... ரெண்டு வருஷத்துக்கு முந்தி, நம்ம ஹாஸ்பிடல் அக்கௌண்ட் செக்ஷனில் வேலை பார்த்த வைகையோட வீட்டு அட்ரஸைப் பழைய ஸ்டாஃப் ஃபைலைப் பார்த்துச் சொல்ல முடியுமா...?"

"ஸாரி... டாக்டர்...! வைகை இப்போ பழைய அட்ரஸில் இல்லை. புது அட்ரஸ் தெரியாது..."

(தொடரும்)



ஆஹா!

# ரூ.50,000 பரிசு!

## கல்கி வழங்கும் கலக்கல் குவிஸ் போட்டி

இது தாங்க ஃபைனல்ஸ், 5வது தேர்தல் குவிஸ் போட்டி. எல்லாக் கூப்பன்களையும் நல்லாப் படிச்சு சரியா நிரப்பிட்டீங்களா? ஒரு தரம் செக் பண்ணிக்கோங்க.

உங்க 5 கூப்பன்களையும், ஒண்ணாப் போட்டு ஒரே கவர்ல 10.4.04 தேதிக்கு முன்னாடி எங்க கைக்கு வந்து சேர்ற மாதிரி அனுப்பிடுங்க. பரிசு பெறப்போற அதிர்ஷ்டசாலி நீங்களாவே கூட இருக்கலாம். ஆல் த பெஸ்ட்!

● எல்லாக் கேள்விகளுக்கும் சரியான பதில்கள் எழுதும் வாசகருக்கு ரூ.50,000/- பரிசு! ● நிறையப்பேர் சரியான விடைகளை எழுதியிருந்தால், பரிசு குலுக்கல் முறையில்தான். ● ஆறுதல் பரிசு 50 பேருக்குத் தலா ரூ. 100/- ● முதல் பரிசுத் தொகை வருமான வரி விதிமுறைகளுக்கு உட்பட்டது. ● உறையின் மேல் 'ஆஹா! ரூ.50,000' என்று கண்டிப்பாகக் குறிப்பிட வேண்டும். ● போட்டி தொடர்பாக விசாரணைக்கு அனுமதியில்லை. ● ஆசிரியரின் தீர்ப்பே இறுதியானது.

### தேர்தல் குவிஸ் போட்டி கூப்பன் - 5

1. குஜராத்தில் தேர்தல் கமிஷனால் பாதியில் நிறுத்தப்பட்ட முதல்வர் நரேந்திரமோடியின் தேர்தல் யாத்திரையின் பெயர் ..............................
2. முன்னாள் உலக அழகி யுக்தாமுகி சார்ந்துள்ள கட்சி ......................................
3. நிர்வாசன் சதன் என்பது .................................. அலுவலகத்தின் ஹிந்திப் பெயர்.
4. முன்னாள் பிரதமர் ராஜீவ் காந்தியின் மகன் ராகுல் காந்தி போட்டியிடும் தொகுதி .......................................
5. மக்களவைத் தேர்தலில் போட்டியிடும் தமிழ்த் திரைப்பட வில்லன் நடிகரின் மகன் .......................................
6. கர்னாடக முதல்வர் எஸ்.எம். கிருஷ்ணாவின் தேர்தல் பிரசார யாத்திரையின் பெயர் .......................................

பெயர் : ..............................................................

முகவரி : ..............................................................

..............................................................

..............................................................

கையொப்பம் : ..............................................................

இப்படியும் நடக்குமா? இந்த அநியாயத்தை எங்கே போய்ச் சொல்வது? தொலைக்காட்சித் தொகுப்பாளிகள் யாராவது, செந்தமிழுக்காக வருத்தப்படுவார்களா? ஐயகோ! இது என்ன அபசாரம்?

எட்டரை மணிக்கே சுள்ளென்று வெயில் அடிக்கும் சென்னையின் காலைப் பொழுதில், மின்னல் தேவதை ஸ்ரீவித்யாவைச் சந்தித்த போது ரொம்பவே வருத்தப்பட்டார்.



# வாம்மா... மின்னல்!

''டிவியிலே காம்பியரிங் பண்ற பெண்களுக்கு, நல்லாவே தமிழ் பேசத் தெரியும். இருந்தாலும் ஸ்டைலா பேசணுங்கிறதுக்காக, திக்கித் திணறி பேசற மாதிரி நடிக்கிறாங்க'' என்று விஷயத்தைப் போட்டு உடைத்தார். வியாழக்கிழமைதோறும் ஜெயா டிவியில் 'சினி மசாலா' தொகுத்தளிக்கும் சித்திரக் கினிதான், மேற்படி விஷயத்தைச் செப்பியது.

ஜெருசலம் இன்ஜினியரிங் கல்லூரியில் எம்.ஈ. படிக்கிறார். பரத நாட்டியம் கற்றவர். மேடை நிகழ்ச்சிகள் என்றால், கலர்ஃபுல்லாகக் கலக்கி விடுவாராம்.

டீஸண்டான விளம்பரப்பட வாய்ப்புகள் கிடைத்தால் நடிக்க ஆசையாம். வாம்மா... மின்னல்!

- ஆதர்ஷ்

தோன்றின் வாரிசோடு தோன்றுக; அஃதிலார்
கட்சியில் தோன்றாமை நன்று.

எல்லா வோட்டும் வோட்டல்ல - சிலருக்கு
சாதிசன வோட்டே வோட்டு.

கூட்டணியைக் கவிழ்ப்பாரே ஒருவர் - அவர்நாண
அடுத்த அணியில் சேர்ந்து விடல்.

பல்குழுவும் பாழ்செய்யும் உட்பகையும் குழப்பங்களும்
கூடி இருப்பதே காங்கிரஸ்.

இராமர்என்ப ஓடும் இரதம்என்ப இவ்விரண்டும்
யுக்தி என்ப தேர்தலில் பிஜேபிக்கு.

வெட்டிய பொழுதில் பெரிதுவக்கும் தன்மகனை
எம்.பி எனக்கேட்ட அய்யா.

தாய் தோழிக்குஆற்றும் நன்றி பின்புலத்தில்
முதன்மையாய் இருப்பச் செயல்.

# அரசியல் குறள்!

ஓர் அதிகாரத்துக்கு பத்துக் குறள்தான்! ஆர்வக் கோளாறு காரணமாக ஒரு குறள் எக்ஸ்ட்ராவாகி விட்டது. அய்யன் திருவள்ளுவர் மன்னிப்பாராக!



## தேர்தல் அதிகாரம்



ஓரணிவிட்டு முற்பகல் விலகின் தனிஅணி
பிற்பகல் தாமே வரும்.

அனுதாப அலை உடைத்தாயின் - தேர்தலில்
பயனும் பதவியும் அது.

கட்சிகளுக்கும் உண்டோ கொள்கைதாழ்? தேர்தலில்
பகைஅணியே இடம் தரும்.

சில்லறைக் கட்சிகளையும் சிலிர்த்தெழச் செய்யும்
சிறப்புப் பொருள் தேர்தல்.

- முகில்

**அ**ப்பா...

அப்படிச் சொல்லும்போதே பரவசமா இருக்கும். எனக்கு அப்பாதான் எல்லாமே. அப்பா எனக்காகவே வாழற ஜீவன். அப்பா என்னை விடக் குள்ளம். என்னை விடக் கறுப்பு. வயசு எழுபது ஆச்சு. ஆனா அறுபதுக்கு மேலே சொல்லவே முடியாது. ஒரு காலத்தில் பனை மரம் ஏறியதால், உரமேறிய கட்டுமஸ்தான உடல். வெள்ளியாக நரைத்த தலை முடி, தாடி மீசை. சுருக்கமா சொன்னால் அப்பா ஒரு கறுப்பு சாந்தாகிளாஸ். அப்பாவை வெறுமனே சாந்தாகிளாஸ்னு சொல்லிட முடியாது. ஏன்னா, எல்லா நாளுமே நான் ஆசைப்பட்டதைச் சொல்லாமலே வாங்கித் தருவாரு அப்பா.

அம்மா....

எனக்கு அவளைப் பிடிக்கவே பிடிக்காது. ஏன்னா, அப்பாவை அம்மாவுக்குப் பிடிக்காது. அம்மா எங்களை விட்டுப் போனதை நினைச்சா, இன்னிக்கும் நெஞ்சு வலிக்கும்.

**அ**ப்பா எப்பவுமே விடியற்காலையிலேயே பனைமரம் ஏறக் கிளம்பிடும். போகும்போது என்னை எழுப்பி, "போயிட்டு வரேண்டா கண்ணு"ன்னு சொல்லிட்டுத்தான் போகும். அன்னிக்கும் அப்படித்தான் சொல்லிட்டுப் போச்சு.

அப்பா போன கொஞ்ச நேரத்துக்கெல்லாம் அம்மா குளிச்சு முழுகி, நல்லா அலங்காரம் பண்ணிக்கிட்டு, அடிக்கடி வாசலையே பார்த்துக்கிட்டே இருந்துச்சு.

கொஞ்ச நேரத்துல ஒரு கார் வந்துச்சு. கார்ல டவுன் மேஸ்திரி வந்தார். டவுன் மேஸ்திரி சிவப்பா வாட்டசாட்டமா இருப்பாரு. மாசத்துல இரண்டு நாள் ஊருக்கு வருவார். ஊருக்கு வந்தா எங்க வீட்டுக்கு பனங்கள் குடிக்க வருவார்.

'காலையிலேயே குடிக்க வந்துட்



# அரைக்காசு

குகன்



# கனவு

டாரே'ன்னு எனக்கு ஒரே ஆச்சரியம். அவசரமா வந்தவரு, ''வா போவ லாம்''னார். அம்மாவும் ஒரு பெட்டியை எடுத்துக்கிட்டுக் கிளம்பிடுச்சு. பாதி தூரம் போனதும் என்ன நினைச்சுதோ தெரியலை... திரும்பி வந்து, ''நல்லாப் படிச்சு வேலைக்குப் போகணும்''னு சொல்லி, முத்தம் கொடுத்துச்சு. அதுக் குள்ள டவுன் மேஸ்திரி, ''விடிஞ்சுகிட்டு இருக்கு, சீக்கிரம்''னார். அன்னிக்குப் போனவதான் அம்மா. அப்புறம் திரும்பி வரவே இல்லை.

அப்பா திரும்பி வந்து 'எங்க'ன்னு கேட்டுச்சு. சொன்னேன். அப்பா ஒண்ணுமே பேசலை. ஆனா நான்தான் விடலை. 'அம்மா எப்ப வரும்'னு அழுது அடம்பிடிச்சேன்.

விவரம் தெரியற வயசு வந்ததும்,

அம்மாவைப் பத்திக் கேக்கறதே இல்ல... அப்பாவுக்குப் பிடிக்காத அம்மாவை எனக்கும் பிடிக்கலை.

கள் விக்கும் போது மேல பட்டு பட்டு, அப்பா மேலேயே கள் நாத்தம் அடிக்கும். ஆனா அப்பா ஒருநாள் கூட குடிச்சதில்லை. அப்பாவுக்கு எவ்வளவோ உடம்பு முடியாத போதும், என்னை விக்கச் சொன்னதில்லை. ''பேனா புடிக்க வேண்டிய கை... கலயத்தைத் தொடக் கூடாது''னு சொல்லிடும்.

அஞ்சாங்கிளாஸ் படிக்கும் போது ஒருநாள் பள்ளிக்கூடம் போயிட்டு சாயங்காலம் வீட்டுக்கு வந்து பார்த்தா, ஒரே ஆச்சரியம்... வீட்ல ஒரு கலயம் கூடக் காணோம். கள் குடிக்கிற பிடி வச்ச கலர் கலர் பிளாஸ்டிக் கப்பும் காணோம். ஆனா மூலைல உயரமா கறுப்புக் கலர்ல ஒரு கேன் இருந்துச்சு. அதுலேந்து வேற மாதிரி நாத்தம் அடிச்சுது.

அதுக்கப்புறம் ஊர்ல யாரும் என்னை 'பனங்கள் பக்கிரி மவன்'னு சொல்றதில்லை... 'பட்டை யாவாரி பக்கிரி மவன்'னு சொல்வாங்க.

நான் பள்ளிக்கூடம் போறதுக்காக, நான் கேக்காமலே அப்பா நீலக் கலர்ல புது சைக்கிள் வாங்கிக் கொடுத்து, ஓட்டவும் கத்துக் குடுத்துச்சு. இப்ப வியாபாரத்துல நிறைய லாபம் கிடைக்கும் போல.

பணம் கிடைச்சு என்ன? ஊர்க்காரப் பயலுக என்னைச் சீண்டி விட்டு அழ விடுவாங்க.

''பட்டை பக்கிரி மவன் படிச்சு என்ன கிழிக்கப் போறான்'னு கேலி செய்வாங்க. என்னைக் கிண்டல் பண்ணினாக் கூட பரவாயில்லை. அப்பாவைப் பண்ணினா, எனக்கு அழுகை முட்டிக்கிட்டு வரும்.

ஒரு நாள் தாங்க முடியல... அப்பா மடில படுத்துக்கிட்டு அழுதேன்.

"கவலைப்படாதடா... அதை விக்கறவங்க கேவலம்னா, அதைக் குடிக்கிறவங்க இன்னும் கேவலமானவங்கதான...? உன்னைக் கிண்டல் பண்றவங்க எல்லாம், நம்ம வீட்ல குடிக்கறவங்கதான..."

''நீ எனக்காக இத விடக் கூடாதாப்பா?..."

அப்பாவோட கண் கலங்கிடுச்சு. எனக்குப் பாவமா போயிடுச்சு.

''நீ பெரியவனாகி வேலைக்குப் போனதும் சத்தியமா விட்டுடுவேன்... நான் விரும்பியா இதைச் செய்யறேன்... வேற வழி இல்லடா..."

"ஊர்க்காரங்க கிண்டல் பண்றதை எப்ப நிறுத்துவாங்கப்பா...?"

''நீ நல்லாப் படிச்சு, கோட் சூட் போட்டு அரசாங்கத்துல வேலைக்குப்

# டிங் டாங்!

• பரசுராம அய்யர்



கோயில் யானை வருகுது
குழந்தைகளே பாருங்கள்!
குதித்து ஓடி வாருங்கள்
டிங்டாங் டிங்டாங்
டிங்டாங் டிங்டாங்!

இப்படித் தொடங்குகிற குழந்தைக் கவிஞர் அழ. வள்ளியப்பாவின் பாடல், நர்ஸரிப் பள்ளிகளில் எல்லாம் மிகவும் பிரசித்தமானது. இதை முதல் பக்கப் பாடலாக வெளியிட்ட வாரப் பத்திரிகையின் பெயரே 'டிங் டாங்' தான்!

புதுகோட்டையிலிருந்த கண்ணபிரான் அச்சகத்தின் உரிமையாளர் பரசுராமய்யர், குழந்தைகளுக்காகவே தொடங்கி நடத்திய பத்திரிகை அது. விலை அரை அணா!

அகிலன், அழ. வள்ளியப்பா போன்

போனா, இந்த ஊர்லேயே அரசாங்க வேலைக்குப் போன முதல் ஆள்னு பெருமையா பாக்கும்."

"வேலைக்குப் போக நான் என்னப்பா பண்ணணும்?"

"நல்லாப் படிக்கணும்."

"நல்லாப் படிக்கணும்"னு அப்பா சொன்னதுக்காகவே நல்லாப் படிச்சேன். எப்படித்தான் எம்.காம். முடிச்சேனோ...? இப்போ நினைச்சாலுமே பிரமிப்பா இருக்கும். முதல் வகுப்புல பாஸ் செய்த சர்டிஃபிகேட்டைக் காண்பிச்சப்போ, அப்பாவோட கண்ணுலே ஆனந்தக் கண்ணீர். படிக்கத் தெரியாத அப்பா, அதைத் தடவித் தடவி சந்தோஷப்பட்டது. இன்னமும் என் கண்ணுலேயே நிக்குது.

ஆனா, இருபத்தைஞ்சு வயதாகியும் அப்பா ஆசைப்பட்டபடி இன்னும் அரசாங்க வேலை கிடைக்கலை.

அம்மா போனதிலிருந்து அப்பா சாமி கும்பிடுவதையே விட்டு விட்டாரு. ஆனா ஒரு வருஷமா என் வேலைக்காகக் கும்பிட ஆரம்பிச்சிருக்காரு. அப்பாவால் முன்னை மாதிரி சம்பாதிக்க முடியலை. தள்ளாமை. தொழில்ல போட்டி. தவிர குருவியா சேர்த்ததெல்லாம் படிப்புக்காகக் கரைஞ்சு போயிடுச்சே! அப்பாவோட கனவெல்லாம் அரைக்காசு கிடைச்சாலும், நான் அரசாங்க உத்தியோகத்துக்குப் போகணும்கிறதுதான். அந்த நாள் வரவே வராதா?

அந்தப் பொன்னாள் இன்னிக்கு வந்துடுச்சு. தபாலில் வேலைக்கான உத்தரவும் வந்துடுச்சு. படிப்புக்கேத்த வேலை இல்லைன்னாலும், எந்த வேலையும் இல்லாமல் பலர் தவிக்கிறதைப் பார்க்கிறப்போ, இதுவாவது கிடைச்சுதேன்னு திருப்திப்பட்டுக்க வேண்டியதுதான். அதுக்குள்ள, அப்பாவே வந்து விட்டாரு.

"ராசா.... உனக்கு அரசாங்க வேலை கிடைச்சுடுச்சாமே! வழிலே தபால்காரர் சொன்னாரு. இனிமே சாராயம் ஊத்தித் தர்ற பிழைப்பே நம்ப குடும்பத்துக்கு வேணாம். மகமாயி துணையிருக்க, மருவாதியா பிழைக்கலாம்..." என்று குரல் நடுங்கச் சொன்னவர், "ஆமா... அரசாங்கத்துலே என்ன வேலை?"னு கேட்டாரு.

அரசாங்கத்தின் மலிவு விலை மதுபானக் கடையில், ஊத்திக் கொடுக்கிற வேலையை அப்பாவிடம் எப்படிச் சொல்றதுனு கண்கலங்கி நின்றேன்.

றோர் வந்து கூடும் சங்கப் பலகையாக விளங்கியது கண்ணபிரான் அச்சகம்.

குழந்தை இலக்கிய வரலாற்றில் புதுக்கோட்டை நகரத்துக்கு மிக முக்கியமான இடம் உண்டு. நகரத்தார்களின் ஆதரவில், அழ. வள்ளியப்பா அவர்களின் மேற்பார்வையில், பாலர்மலர், டமாரம், சங்கு போன்ற சிறுவர் இதழ்கள் ஐம்பதுகளின் தொடக்கத்தில் வெளியாயின.

காகிதம் கிடைக்காத பஞ்ச காலத்தில் எல்லாச் சிறுவர் இதழ்களும் நின்று போயின.

குழந்தைகள் இதழ்கள் நின்றுபோன ஏக்கத்தில் பரசுராமய்யர், தாமே தொடங்கியதுதான் 'டிங்டாங்'.

சமீபத்தில் இந்தப் பரசுராமய்யருக்கு நூற்றாண்டு விழா சிறப்பாகக் கொண்டாடப்பட்டது.

- சுப்ர. பாலன்



ஏப்ரல் .4 - 2004

# மினி கல்கி



[illegible]

ஓவியர் மருது

டாக்டர் கே.ஸ்ரீதர்

டாக்டர் எஸ்.அஷோக்

டாக்டர் எஸ்.மகாதேவன்

சவேரா ஹோட்டல்ஸ் நீனா ரெட்டி

வழக்கறிஞர் கே.சுமதி

டாக்டர் இரா.அன்புமணி

பேராசிரியர் கு.ஞானசம்பந்தம்

டாக்டர் தமிழிசை சௌந்தரராஜன்

## நீ, நான், நாம்!

மணவாழ்க்கை பலப்பட டிப்ஸ்

-டாக்டர் எஸ். ஆனந்தன்



"அப்புறம், அந்த ராஜாவும், ரோஜாவனத்து தேவதையும் கல்யாணம் பண்ணிக்கிட்டு சந்தோஷமா இருந்தாங்களாம்."

வெண்ணெய் மாதிரி பிசைஞ்ச தயிர் சாதத்தை, பாட்டி உருட்டி உருட்டி வைக்க, அது பாட்டுக்கு 'குளுக் குளுக்' என்று வாய்க்குள்ளே போனதே சுவாரசியமான 'உம்'கொட்டலில் தானே?

நிஜம்தான். நமக்கெல்லாம் 'சுபமான' முடிவுகள் கொண்ட கதைகள் கேட்பதில்தான் எவ்வளவு விருப்பம்? அதனால்தான் பெரும்பான்மையான திரைப் படங்களில் 'தாலிகட்டும்' மங்களமான காட்சியுடன் 'வணக்கம்' போடுவார்கள். ஜனங்களும் சிரித்துக் கொண்டே கலைவார்கள்.

'கல்யாணம்தான் மனித வாழ்க்கையின் உச்சக் கட்ட மகிழ்ச்சி' என்பது குழந்தையிலிருந்தே ஊட்டி விடப்படும் விஷயம். மனோ ரீதியான பதிவு. அதனால்தான் தாம்பத்திய வாழ்க்கை மிகுந்த எதிர்பார்ப்பும், கனவுகளும் கொண்டதாகிறது. ஆனால் கற்பனை செய்து வைத்த அளவுக்கு வாழ்க்கைத் துணை அமையாத போது, மிகுந்த ஏமாற்றமும் நிராசையும் ஏற்பட்டு, மணவாழ்க்கை கசந்து விடுகிறது.

அந்த பிட்டர் வாழ்க்கை பெட்டராக, இதோ சில யோசனைகள்...

## மகிழ்ச்சியைத் தேடி...

வாழ்க்கையின் நோக்கம் என்ன?

மகிழ்ச்சியாக இருப்பது, உபயோகமாக இருப்பது, நேர்மையும் பரிவும் கொண்டவராக இருப்பது, பொறுப்பும் அன்பும் கொண்டவராக இருப்பது, நாமும் மகிழ்ந்து, மற்றவரையும் மகிழ்விப்பது. அந்த மகிழ்ச்சியைத்தான் நாம் எல்லோருமே



தேடிக் கொண்டிருக்கிறோம்.

ஐந்து வயது சுட்டிப் பயல் சுந்தர். குறும்புகளின் குத்தகைக்காரன். ஒரு நிமிஷம் சும்மா இருக்க மாட்டான். அவன் கண்ணுலே ஒரு வண்ணத்துப் பூச்சி பட்டுவிட்டது! அழகுன்னா அழகு, அப்படியொரு அழகு! அவனோட உள்ளங்கை அளவுக்குப் பெரிசு. மினுமினுன்னு மஞ்சள் நிறத்திலே, கலர் கலரா டிசைன் வரைஞ்சுக்கிட்டு, 'ஜிவ்'வுன்னு இறங்கறதும், படபடன்னு இறக்கையை அடிக்கிறதுமா, ரொம்ப பிஸியா இருந்தது.

சுந்தர், சும்மா இருப்பானா? எப்படியாவது அதைப் பிடிச்சே ஆகணும்னு ஆசை வந்தது. துரத்த ஆரம்பிச்சான். அது கையிலே கிடைச்சாதானே? வேலியோரக் கொடி, எதிர் வீட்டு ஜன்னல், கோயில் மணி, மாடிப் படினு தாவித் தாவி பறந்து, டிமிக்கி கொடுத்து விட்டது!

சுந்து பயலுக்கு 'சீய்'னு வெறுப்பாப் போச்சு. "இந்த பட்டர்ஃபிளை ரொம்ப ப்ரவுடு. ஐ டோண்ட் வாண்ட் இட்"னு சொல்லிட்டு, வீட்டுக்குப் போயிட்டான்.

ஹோம்வொர்க் நோட்டை எடுத்து, டீச்சர் கொடுத்த கணக்கைப் போட ஆரம்பிச்சான். மனசுலே யிருந்து மஞ்சள் வண்ணத்துப் பூச்சி போயிடுச்சு. வீட்டுப் பாடத்தை முடிச்சு எழுந்திருக்கப் போனவன், அப்படியே திகைச்சு உட்கார்ந்துட்டான். அட! அதே மினுமினு மஞ்சள் வண்ணத்துப்பூச்சி! இப்ப, அவன் தோள்லே இல்லே உட்கார்ந்துக்கிட்டிருக்கு!



மினி கல்கி



• டாக்டர்
எஸ். ஆனந்தன்

மகிழ்ச்சி, ஒரு வண்ணத்துப் பூச்சி. அதை நாம் துரத்திக் கொண்டு ஓடும் போது, அது இலேசில் அகப்படுவதில்லை. கொண்ட கடமையிலே கண்ணும் கருத்துமா உட்கார்ந்துட்டா, மகிழ்ச்சியானது, நம்ப தோளிலே தானாவே வந்து உட்காரும்.

தாம்பத்ய வாழ்க்கையில் மகிழ்ச்சியோடு இருக்க நினைத்தால், வலுக்கட்டாயமாக எதையும் செய்யாதீர்கள். உங்கள் கடமைகளையும், குடும்பப் பொறுப்புகளையும் சரிவரச் செய்யுங்கள். மகிழ்ச்சி தானாகவே உருவாகும்.

## மனசால் நெருங்கி...



ஒருமுறை, வெளி யூருக்கு பஸ்ஸில் போக நேர்ந்தது. ஏதோ விசேஷமான நாள். பஸ்ஸில் கூட்டம் நிரம்பி வழிந்தது. என் அருகே ஒரு தம்பதி நின்று கொண்டு வந்தார்கள். அவருக்கு ஐம்பத் தைந்து வயதிருக்கும். அவரது மனைவிக்கு ஐம்பது இருக்கலாம். திடீரென்று அவருடைய மனைவி பரபரப்பு அடைந்து எதையோ சொல்ல, அந்தக் கணவர், மனைவியின் கன்னத்தில் மாறி மாறி அறைந்தார். முதுகிலும் இரண்டு அடி விழுந்தது. பஸ்ஸே ஸ்தம்பித்து விட்டது! குறிப்பாக நான்.

மனைவியிடம் அவர் கொடுத்து வைத்திருந்த தோல்(ள்) பை, பிளேடு போடப்பட்டிருக்க, பணம், டிக்கெட் எல்லாம் போய்





விட்டதாம். அதற்காக, மிக மோசமான வார்த்தைகளால் குதறித் தள்ளினார். சலவை செய்த உடையில், நாகரீகமான தோற்றத்துடன் இருந்த அவர், ஏதோ குடிகாரன் போல நடந்து கொண்டது, எனக்கு அதிர்ச்சியாக இருந்தது. அவமானத்தில் குன்றிப் போன அவரது மனைவி, குனிந்த தலை நிமிரவே இல்லை.

இந்த டீஸெண்ட் ஆசாமி, தான் வேலை செய்யும் இடத்தில், தன் முதலாளியிடம் இப்படி உணர்ச்சிவசப்பட்டு நடப்பாரா? உயர் அதிகாரிகளிடம் தன்னுடைய முரட்டுத்தனத்தைக் காட்டுவாரா? எப்படி எல்லாம் பணிவார்? நாய் போலக் குழைவார். அந்தக் குழைவில், ஒரு சதவிகிதம் கூட காட்ட முடியாத அளவுக்கு மனைவி என்பவள் மட்டமானவளா? இப்படிக் கொடூரமாக நடந்து கொள்ளும் கணவனிடம், அந்த மனைவியால், மனத்தால் நெருக்கமாக வாழ முடியுமா?

''என்னம்மா... பொது இடம்னும் பார்க்காம இப்படி கைநீட்டிட்டாரே! உங்களுக்கு ரொம்பப் பொறுமை'' என்று

மினி கல்கி

யாராவது அந்தப் பெண்ணிடம் கேட்டிருந்தால்,

''வேறே வழி இல்லீங்க. அடி வாங்கி அடி வாங்கி நான் மரத்துப் போயிட்டேன். வளர்ந்த பசங்க இருக்காங்கனு அட்ஜஸ்ட் பண்ணியே வாழ்ந்தாச்சு. இனியும் ஒப்புக்கு வாழ்ந்துட்டா போச்சு'' என்று வெறுப்புடன் புலம்பியிருப்பார் என நினைக்கிறேன்.

இதுபோன்ற ஜோடியை 'close strangers' (நெருங்கிய அன்னியர்கள்) என்பார்கள்.

உலகில் மிக மிக அன்புடனும் பரிவுடனும் நடந்து கொள்ள வேண்டிய முதல் நபர், கணவன்/மனைவி. உங்களிடமிருந்து மிக அதிகம் பயன்பெற வேண்டியவரும் அவரேதான்! உங்கள் படிப்போ, பணமோ, நடவடிக்கையோ, உங்கள் வாழ்க்கைத் துணையை சந்தோஷமாக வைக்கவில்லை என்றால், நீங்கள் நோபல் பரிசு, மகஸேஸே விருது, ஜனாதிபதி விருது என என்னென்ன வாங்கிக் குவித்தாலும், அது விருது இல்லீங்க. எரியாத ஈர விறகு!



## வார்த்தைகள் வாசம் வீசட்டும்

லியோனார்டோ டாவின்ஸி மிகப் பிரபலமான ஓவியர். 'கடைசி விருந்து' என்ற அவரது ஓவியம் உலகப் பிரசித்தி பெற்றது. அதை அவர் வரைந்து கொண்டிருந்த போது, அவரது மனைவி உணவு கொண்டு வந்து வைத்தார். நம்ம ஓவியருக்கு ஏதோ டென்ஷன்! ''சாப்பாடு சரியில்லை'' என்று 'சள்ளுபுள்ளு' என்று எரிந்து விழுந்தார்.





உணவுத் தட்டைத் தூக்கி அடித்தார். அவரது மனைவி பரம சாது! ஒன்றும் பேசாமல் கீழே இறங்கிப் போய் விட்டார். ஓவியத்தைத் தொடர்ந்தார் டாவின்ஸி. எல்லாம் சரியாக வந்து விட்டது. ஆனால் ஏசுவின் கருணை பொங்கும் முகம் மட்டும் எத்தனை தடவை வரைந்தாலும் திருப்தியாக வரவில்லை. உடனே, தூரி கையைக் கீழே வைத்தார். மாடிப்படி இறங்கி, மனைவியிடம் போனார். ''ஸாரி, அநாவசியமா கோவிச்சுக்கிட்டேன். இனி இப்படி நடக்க மாட்டேன்'' என்று கைகளைப் பிடித்துக் கொண்டு மன்னிப்புக் கேட்டார். தம்முடைய அறைக்கு வந்து, விட்ட இடத்திலிருந்து வரைய ஆரம்பித்தார். என்ன ஆச்சரியம்! இந்த முறை, ஏசுபிரானின் முகத்தில் அவர் எதிர்பார்த்த அன்பு வெளிப்பட்டது.

பரிவுடனும், நேசத்துடனும் நடந்து கொள்பவர்களின் எண்ண அலைகள், நல்ல வளத்துடன் சக்திமிக்கதாக மாறுகின்றன. எனவே, கணவனும் மனைவியும் மனத்தளவிலும் நெருக்கமாக வாழ, இருவருக்கிடையே நல்லெண்ண அலைகள் பரவ வேண்டும். அந்த நல்லெண்ணங்கள், ஆக்கபூர்வமான வாழ்க்கைக்கு அஸ்திவாரம் இடும்.

## நல்லெண்ண நினைவுகள் நிலைக்க...

இனிய வார்த்தைகளை மட்டுமே பேசுங்கள்.

மனித உடலிலிருந்து வெளியேறும் எல்லாமே துர்நாற்றம் உடையதாக இருக்கிறது. வியர்வை, இரத்தம், கழிவுப் பொருட்கள் எல்லாமே சகித்துக் கொள்ள முடியாத அருவெறுப்பைத் தருபவை.



ஆனால் ஒரு மனிதனின் உதட்டிலிருந்து வெளியாகும் வார்த்தைகள் மட்டுமே மிகவும் இனிமையானவை. ஆனால் துரதிர்ஷ்டவசமாக, அவையும் துர்நாற்ற முள்ளதாக இருந்தால், அந்த மனிதனை, அவள் மனைவியோ, கணவனோ, நிச்சயம் மனத்தால் நெருங்க மாட்டார்.

கனியைக் கனிய வைக்க, வெப்பம் தேவை. அதனால்தான் முற்றிய மாங்காயை, வைக்கோலுக்குள் மூடி வைத்துப் பழுக்க வைப்பார்கள். அதே போலத்தான், எப்பேர்ப்பட்ட கல் மனதையும், அன்பான வார்த்தைகள் கொண்டு, கதகதப்பு மூட்டி, கனிய வைக்க முடியும்.



உங்கள் கணவனோ, மனைவியோ இறுக்கமான டைப் பாக இருந்து விட்டால், நீங்கள் பொறுமையின் திலகமாக, இனிமை யாகப் பேசினால்தான் பாலன்ஸ் ஆகும். இல்லையென்றால், காலத் துக்கும் ஒருத்தர் முருங்கை மரமாக, இன்னொருவர் வேதாளமாக, 'அம்புலிமாமா' கதை தொடரும்!

## வேண்டாம் நூறு சதவிகிதம்!

கணவன் - மனைவி இடையே வார்த்தைப் போர்கள் மூள இன்னொரு முக்கியக் காரணம், யாராவது ஒருத்தர் பர்ஃபெக்ஷனிஸ்டாக இருப்பதுதான்!

"இந்தச் சட்டை துவைச்ச மாதிரியே இல்லையே! என்ன இழவு துவைக்கிறே நீ! இது என்ன சேமியா உப்புமாவா? மரத்தூள் சாப்பிட்ட மாதிரி இருக்கு" என்று கணவன் குதிப்பான்.



“ஒரு வேலை செய்யத் துப்பு இருக்கா? இப்படித் தான் ஒட்டடை அடிக்கிறதா? பூச்சியையும் சேர்த்து அடிச்சாதான் நாளைக்கு வலை கட்டாது. என்னமோ, தடவிக் குடுக்கறீங்களே! யார் இப்படி டூத் பேஸ்ட்டை பிதுக்கி எடுத்தது? கொஞ்சமா பொட்டாட்டம் எடுக்கணும்னு எத்தனை முறை சொல்றது? உங்க முழு பலத்தையும் இதுலதான் காட்டணுமா?” மனைவி ‘காச்மூச்’ என கத்துவாள்.



இப்படி ஓராயிரம் சந்தர்ப்பங்கள். Don't be a perfectionist! நாம் பூரணத்துவத்தை எதிர்பார்க்கும்

மினி கல்கி

மனோநிலை உடையவர்களாக இருந்தால், மிகச் சிறிய தவறு கூட பூதாகாரமாக உறுத்தும். 1% சரியில்லை என்றாலும், 99% சரியாக உள்ளதைப் பாராட்டி மகிழ்வதற்கு பதில், எரிச்சல் படுவோம்.

உங்கள் துணையின் நடவடிக்கைகள், நீங்கள் எதிர்பார்க்கும் அளவுக்கு இல்லாமல் போனால், அவர்களைக் குற்றம்சாட்டி, புண்படுத்தாதீர்கள். இதனால், வாய்ச்சண்டையைத் தவிர, பெரிதாக வேறு எதையும் சாதித்து விட முடியாது.

வாழ்க்கையையும், வாழ்க்கைத் துணையின் இயல்புகளையும், அதனதன் போக்கிலேயே எடுத்துக் கொள்வதுதான் சிறந்தது. சண்டையிட்டுக் கொள்ள வேண்டிய நிலைமை உருவானால், சிரித்தே பேசி, கிண்டலடித்துத் தள்ளி விடுங்கள்.

ஒருவரது எண்ணங்களை, நம்பிக்கைகளை, மற்றவர்கள் மீது திணிக்காதீர்கள். ஒத்துப் போகாமலிருக்கும் மனோபாவத்துக்கும் ஒத்துப் போவதுதான், நல்ல தாம்பத்யம். அப்படிச் செய்வதையும் பெரிய தியாகமாக நினைத்து மறுகாமல், மகிழ்ச்சியோடு செய்யுங்கள். நம்மிடம் குறைகள் இல்லையா...? நூறு சதவிகித கச்சிதம் என்பது என்ன...? கொஞ்சம் யோசித்தால் புரியும்... அது நம்முடைய எதிர்பார்ப்பின் உருவகம்தான்! அதற்குள் இன்னொருத்தரைச் சிறை வைக்க நமக்கேது உரிமை!

## விரிசலை அடைக்கலாம்!



''ஓகே.... இன்றிலிருந்து உங்கள் இஷ்டப்படி வாழலாம். பிரியத் தடை ஏதுமில்லை'' என்று அறிவித்தால், ''யப்பா... விட்டதடா சனியன்'' என்று பிரிந்து செல்லத் தயாராகவே பல தம்பதிகள் இருக்கிறார்கள். அதிலும் காதலித்துக் கல்யாணம் செய்து கொண்டவர்களின் உறவில், அடிக்கடி விரிசல் ஏற்படுவது மிக சகஜம்.

கல்லூரி விடுதிகளில் சேருபவர்கள்,





முதலில் ஒரே ஊர்க்காரர்களாகப் பார்த்து அறையைப் பகிர்ந்து கொள்வார்கள். ஆனால் சில மாதங்களிலேயே சண்டை போட்டுக் கொண்டு பிரிந்து விடுவார்கள். காரணம், எதிர்பார்ப்பு!

காதல் கல்யாணங்களில் கற்பனைகளும், எதிர்பார்ப்புகளும் மிக அதிகம். கொஞ்சம் மனவருத்தம் ஏற்பட்டாலும், பிளவு உண்டாகிறது. கணவன் - மனைவி உறவு என்பது மிக அந்தரங்கமான பந்தமாகவும், அதிக உரிமைகளைக் கோரும் உறவாகவும் உள்ளது. ஒருவர் மீது ஒருவர் ஆதிக்கம் செலுத்த முனையும் போது, வெகு விரைவில் சலித்துப் போகிறது.

சிறு சிறு சுயமாற்றங்களால், போரடிக்கும் மணவாழ்க்கையை, நிச்சயம் உற்சாகமானதாக்கலாம். முதல், சுயமாற்றமாக, உரிமை கோராதீர்கள். அன்பை மட்டுமே விதையுங்கள். அன்பு உறுதியானால், உரிமைகள் கனிந்து தாமாகவே கைவசப்படும்.

## அன்பை விதை!

சரி, அதற்கு என்ன செய்ய வேண்டும்?

அன்பை வெளிப்படுத்த வேண்டும்! உலகில் பிறந்த ஒவ்வொரு ஜீவனும் அன்பையும், பாராட்டையும் மிகவும் விரும்புகிறது. பிறரிடம் அன்பு காட்டி, பரிவுடன் பேசி, பாராட்டி மகிழும் உள்ளங்களாலேயே

உயிரோட்டமுள்ள உண்மையான மண வாழ்வு அமைகிறது.

அவர்கள் யாசிக்கும் அன்பும், அக்கறையும் வாழ்க்கைத் துணையிடமிருந்து கிடைக்காத விரக்தியின் வெளிப்பாடே, கள்ளக்காதல் உறவுகள்! சில சமயம், அன்பு காட்டாத கணவன்/மனைவியைப் பழிவாங்கும் செயலாகவே இதை அவர்கள் செய்கிறார்கள் என்பது மனோதத்துவ உண்மை. உடல் சுகம், பணம், அலுவலக சலுகைகள் போன்றவை இரண்டாம் பட்சமே! இதனாலெல்லாம் கள்ளக் காதல் நியாயப்படுத்தப்பட முடியாது. எனினும் அதன் பின்னணி என்னவென்று தெரிந்திருப்பது, நம் வாழ்வில் தவறுகளைத் தவிர்க்க உதவும்.

அன்பை வெளிப்படுத்துங்கள். பேச்சால், செய்கையால், நடத்தையால், சில சமயம் மௌனத்தால், அன்பை வெளிப்படுத்துங்கள். வெளிப்படுத்தப்பட்டால்தான் அன்பு அறியப்படும். இளம் முத்தங்கள், அன்பான அரவணைப்பு, ஆசைப் பேச்சு, கொஞ்சல் மொழி, சங்கேத பாஷை, சிறு பரிசுகள் போன்றவை, உங்கள் அன்பை வெளிப்படுத்தும்.



'எதிரொலி என்றால் என்ன?' என்று தெரிந்து கொள்ள விரும்பினாள் சிறுமி விஜி. மலை முகட்டுக்குப் போய், ஏதாவது பேசிவிட்டு வரும்படி, அனுப்பி வைத்தாள் விஜியின் தாய்.

மலை உச்சிக்குப் போன விஜி, "நீ ஒரு முட்டாள்" என்று கத்தினாள். அடுத்த சில விநாடிகளில், "நீ ஒரு முட்டாள்" என்று மலை முகடு பலமுறை எதிரொலித்தது. விஜிக்கு அந்த அனுபவம் புதியது. அவள் அழுது கொண்டே ஓடிப் போய், நடந்ததை அம்மாவிடம் சொன்னாள்.

"சரி, இந்த முறை அந்த மலைக்கிட்டே, நீ ரொம்ப நல்லவள்னு சொல்லு" என்று சொல்லி அனுப்பினாள். அதே போல விஜியும் கத்த, மலையும் அவள் சொற்களை அப்படியே வாங்கி எதிரொலித்தது.



நம் வாழ்க்கையும் எதிரொலி போன்றதுதான். அன்பை ஒலித்தால், அன்பை எதிரொலிக்கும். வம்பை ஒலித்தால் வம்பைத்தான் எதிரொலிக்கும்.



## மணவாழ்க்கை பலப்பட இதோ சில டிப்ஸ்...

* ஆணும் பெண்ணும் வெவ்வேறு! இயற்கைப் படைப்பே அப்படித்தான் என்று முதலில் புரிஞ்சுக்கோங்க. அவர்களுக்குள் இமோஷனல் டிஃபரென்ஸ் நிறைய இருக்கும். அதற்கு ஏற்ற மாதிரியான ரியாக்ஷன்களைத்தான் எதிர்பார்க்கணும்.

* பலத்த சண்டையா? ஆண்கள் கோபத்துடன் வெளியேற, பெண்கள் அழுவதில் முடிகிறதா? அதனால் மனம் வெறுத்துப் போகாதீர்கள். நம்முடைய பிரச்னை என்ன, நம் தரப்பு நியாயம் என்ன என்பதை எடுத்துச் சொல்ல, சரியான சந்தர்ப்பம் வரும். அதுவரை பொறுமையுடன் காத்திருக்கவும். ஆனால் பெரும்பாலும் சண்டை வந்தால், அடிதடியாகி, மேலும் மேலும் வளர்ந்து, ஒரு கட்டத்தில் சேர்ந்தே வாழ முடியாது என்ற மனோபாவம் கெட்டிப்பட்டு விடும். அந்த நிலைமை வரும்முன் விழித்துக் கொண்டு, பிரச்னைகளை பக்குவமாகக் கையாள வேண்டும்.

மினி கல்கி

* "அவள் கிழக்கு; நான் மேற்கு! இரண்டு பேருக்கும் எந்த விஷயத்துலேயும் ஒற்றுமை இல்லை" என்று புலம்பாதீர்கள். இருவருக்கும் ஆர்வம் உள்ள பொதுவான விஷயங்கள் ஒருசில நிச்சயமாக இருக்கும். அவற்றைச் சேர்ந்து செய்யுங்கள். மற்றவற்றிலும் கொஞ்சம் உற்சாகமும் வித்தியாசமான ரசனைகளை ஏற்கிற பக்குவமும் வரும்.

* ஈகோவை சுத்தமாக ஒழித்துவிட்டு உண்மையான அன்பைக் கொடுங்கள், பலமடங்கு அதிகமாக அது உங்களுக்கே திரும்பி வரும்.

பிறகென்ன?



மனைவி / கணவன் அமைவதெல்லாம் இறைவன் கொடுத்த வரம்தான்!

தொகுப்பு : **அனுராதா சேகர்**

அட்டைப் படம், படங்கள் : **ஸ்ரீஹரி**

படங்கள் : **'க்ளிக்' ரவி**

கார்ட்டூன்ஸ் : **ஷ்யாம்**



# பூகம்பம்



— அமரர் கல்கி

கணையாழி கிராமத்து ஸ்திரீ சமூகத்தின் வாழ்க்கையில் ஒரு பெரிய மானஸீக பூகம்பம் நிகழ்ந்து கொண்டிருந்தது. அந்த பூகம்பத்தினால் ஏற்பட்ட பெரும் பிளவுகளில், வெகு நாளைய நம்பிக்கைகள், மாமூல் வழக்கங்கள் எல்லாம் விழுந்து மறைந்து போய்க் கொண்டிருந்தன.

ஒரு நாள் இரவு, சந்திரசேகரன் வழக்கம்போல் படுக்கையறைக்குள் புகுந்தபோது பெரியதோர் அதிசயத்தைக் கண்டான். அவனுடைய தர்மபத்தினி ஸ்ரீமதி சாரதாம்பாள், ஹரிஹரய்யர் இங்கிலீஷ் பாலபாடத்தைப் பிரித்து வைத்துக் கொண்டு, "பி - ஐ - ஜி = பிக்கு = பன்றி" என்று எழுத்துக் கூட்டிப் படித்துக் கொண்டிருந்தாள்.

"இது என்ன அதிசயம்? இங்கிலீஷ் படிப்பிலே திடீரென்று இவ்வளவு பிரேமை ஏற்பட்டதென்ன?" என்று சந்திரசேகரன் பரிகாசக் குரலில் கேட்டான்.

"ஆமாம்; பரிகாசம் பண்ணத்தான் உங்களுக்குத் தெரியும். இல்லாவிட்டால் உலகத்தில் நாலு பேரைப் போல் எனக்கு இரண்டு எழுத்துத் தெரிய வேண்டுமென்று உங்களுக்கு இருந்தால்தானே?" என்றாள் சாரதா. அவளுடைய நீலக் கருவிழிகள் கண்ணீர்ப் பிரவாகத்தைப் பெருக்குவதற்கு ஆயத்தம் செய்யத் தொடங்கின. ஆனால் சந்திரசேகரன் வெறும் ஆண் சடந்தானே? ஆகவே அவன் அதைக் கவனியாமல், "நான் வேண்டுமானால் காரணம் சொல்லட்டுமா? சகுந்தலை மாதிரி நாமும் ஆகவேண்டுமென்று ஆசை. நிஜமா, இல்லையா?" என்றான்.

உடனே ஒரு தேமல் சத்தம் - "எனக்குத் தெரியுமே, நீங்கள் அவளையே நினைத்துக் கொண்டிருக்கிறீர்கள் என்று!" - அவ்வளவுதான். கண்ணீர் வெள்ளம் பெருகத் தொடங்கி விட்டது. அன்றிரவு வெகுநேரம் வரை அந்த வெள்ளத்தில் கரைகாணாமல் தத்தளித்துக் கொண்டிருந்தான் சந்திரசேகரன்.

- கணையாழியின் கனவு



# ஸ்ரீ சாரதா சக்தி பீடம்




72, காமராஜ் சாலை, பழைய பெருங்களத்தூர்,
(வழி) தாம்பரம், சென்னை – 63. போன் : 22760612.
City Office No.7,முதல் மாடி, வேலு தெரு, மேற்கு மாம்பலம்,
(அயோத்யா மண்டபம் அருகில்) சென்னை – 33.போன் 23714942.
எமது புதிய கிளை நிறுவனம் : எண். 7, 30வது தெரு, தில்லைகங்கா நகர்,
நங்கநல்லூர், சென்னை – 600 061. போன் : 22333214


## தமிழ் புத்தாண்டு நல்வாழ்த்துக்கள்

### ஏழை மாணவர்களுக்கு உதவுங்கள்

பேரன்புடையீர், வணக்கம்!

நம் சக்தி பீடத்தின் சார்பில் கடந்த 15 ஆண்டுகளாக நடைபெற்று வரும் “ஸ்ரீ ராமகிருஷ்ண சேவா குருகுலத்தில்” தாய், தந்தையற்ற, திக்கற்ற மற்றும் வறுமை கோட்டின் கீழ் வாழும் 180 மாணவ மாணவிகளும் தங்கி படித்து வருகின்றனர்.

நாள்தோறும் இறைவழிபாடு, கூட்டு பிரார்த்தனை, பகவத்கீதை பாராயணம் ஆகியவைகளுடன், நல்ல கல்வி, காலை மாலை உடற்பயிற்சி ஆகியவைகள் அளிப்பதுடன், உணவு, உடை, தங்குமிடம் ஆகியவைகளும் இலவசமாக வழங்கப்பட்டு நல்ல முறையில் வளர்ந்து வருகிறார்கள்.

மேலும் பகவான் ஸ்ரீ ராமகிருஷ்ணர், சுவாமி விவேகானந்தர் ஆகியோர்களின் உயர்ந்த லட்சியங்கள் போதிக்கப்படுவதுடன், சமுதாய சேவை பயிற்சியும் அளிக்கப்படுகிறது.

இக்குருகுலத்தின் பராமரிப்பு செலவு முழுவதும் நன்கொடையாளர்கள் அளிக்கும் உதவிகள் மூலம் மட்டுமே நடைபெற்று வருகிறது. ஆகவே தாங்கள் இப்புனிதப் பணிக்கு தங்களால் இயன்ற உதவியைச் செய்யும்படி பணிவன்புடன் கேட்டுக் கொள்கிறோம்.

| | | |
|---|---|---|
| • காலை சிற்றுண்டி (180 பேருக்கு) | ரூ. | 1,000/- |
| • மதிய உணவு | ரூ. | 2,000/- |
| • இரவு சிற்றுண்டி | ரூ. | 1,000/- |
| • இனிப்பு மற்றும் பால் வழங்குதல் | ரூ. | 1,000/- |
| • ஒரு மாணவனுக்கு ஓராண்டிற்கு கல்வி உதவித்தொகை | ரூ. | 1,000/- |
| • ஒரு மாணவனுக்கு பராமரிப்பு செலவு ஓராண்டிற்கு (உணவு, உடை, கல்வி) | ரூ. | 12,000/- |
| • குருகுலத்தின் ஒரு மாதத்திற்கான பராமரிப்பு செலவு | ரூ. | 2,00,000/- |

மேலும் தங்களின் பிறந்த நாள், திருமண நாள், குழந்தைகளின் பிறந்த நாள், தொழில்/வியாபாரம் தொடங்கிய நாள், மற்றும் இதர பண்டிகை நாட்களான தீபாவளி, பொங்கல், கிறிஸ்துமஸ், ரம்ஜான் போன்றவைகளில் மாணவர்களுக்கு சிறப்பு விருந்து ஒன்றை அளித்து அவர்களுடன் மகிழ்ச்சியைப் பகிர்ந்து கொள்ளலாம்.

தாங்கள் அளிக்கும் தொகை எவ்வளவு சிறியதாக இருந்தாலும் அன்புடன் ஏற்றுக்கொள்கிறோம். தங்கள் நன்கொடைகளை ஸ்ரீ சாரதா சக்தி பீடம் என்ற பெயருக்கு Cheque / DD / MO மூலம் அனுப்பி வைக்கும்படி பணிவன்புடன் கேட்டுக் கொள்கிறோம்.

இறைவன் தொண்டில்
சுவாமி ஸ்ரீ ஸர்வத்மானந்தர்
நல்லாசியுடன்

சுவாமி ஸ்ரீ அம்பிகானந்தா

A.ராஜாபக்கிரிசாமி MSc., MEd.,

நன்கொடைகளுக்கு 80G பிரிவின்படி வருமானவரி விலக்கு உண்டு.

• நெட்டிலிருந்து சுட்ட ஜோக்!




கணினி உலகின் புதிய கண்டுபிடிப்பு Virtual Keyboard. கணினியுடன் இணைக்கப்பட்டுள்ள ஒரு மினி புரொஜெக்டர், உங்கள் மேஜையில் ஒளிக்கீற்றுகளால் கீ-போர்டின் வடிவத்தைக் கொண்டு வருகிறது. பட்டன்களைத் தட்டும் வேலையை மேலும் எளிதாக்குகிறது இந்த கீ-போர்டு! ஜெர்மனியில் உள்ள ஹேனோவரில் (Hanover) நடந்த Cebit - கணினிக் காட்சியில் இந்தக் கீ போர்டை Siemens அறிமுகப்படுத்தியுள்ளது. லேப்டாப், டேபின் பிசி மற்றும் மொபைல்களில் பயன்படக் கூடிய இந்த கீ போர்டு - ஒரு புரட்சி என பறை சாற்றுகிறது www.ananova.com/news.

'யாருக்கும், எதற்கும் தப்பித் தவறிக்கூட பயன்பட்டு விடக் கூடாது' என்று கங்கணம் கட்டிக் கொண்டு செயல்படுகிறது. superbad.com என்ற தளம். சின்ன வட்டங்கள், கட்டங்கள், படங்கள், புரியாத மொழிகள், எழுத்துகள் என இதனுள் நம் பயணம் போய்க் கொண்டே இருக்கிறது. ஒரு தகவலுமின்றி! இப்படிக் குழப்புகிறார்களே, ஒருவேளை இந்தத் தளத்தை வடிவமைத்தவர்கள் காங்கிரஸ் கட்சியில் இருந்திருப்பார்களோ?!

# காதல் அகரமே 11ம் கிரகமே!



செவ்வாய் ஆராய்ச்சிகளுக்கு அடுத்தபடியாக, இப்போது அதிகம் பேசப்படுவது செட்னா (sedna) பற்றித் தான். கலிஃபோர்னியா இன்ஸ்டிடியூட் ஆஃப் டெக்னாலஜியைச் சேர்ந்த விண்வெளி ஆராய்ச்சியாளர் மைக்கேல் பிரௌன், செட்னாவை சூரியக் குடும்பத்தின் 10வது கோளாகக் கண்டுபிடித்துள்ளார். சூரியனிலிருந்து 3 பில்லியன் கி.மீ தொலைவிலும், பூமியிலிருந்து 40 வருட பயண தூரத்திலும் இருப்பதாக நம்பப்படும் இந்தக் கோளுக்கு வைக்கப்பட்டுள்ளது கிரேக்கக் கடல் கடவுளின் பெயர். மிகச் சிறிய கோளான புளூட்டோவை (விட்டம் 2300 KM)விட, இந்தக் கோள் சிறியதாம் (விட்டம் 2000 KM). புளூட்டோவைக் கண்டுபிடித்து (1930) 74 வருடங்களுக்குப் பின் கண்டுபிடிக்கப்பட்டுள்ள செட்னாவைப் போல் இன்னும் பல கோள்கள் கண்டுபிடிக்கப்படும் என ஆருடம் கூறுகிறது CNN.com வலைத்தளம்.

இனி தமிழ்க் கவிஞர்கள், 'காதல் அகரமே, 11-ம் கிரகமே' என வர்ணித்துப் பாட ஆரம்பித்து விடுவார்கள்

• முகில்

## வலை பாயுதே!

# வீரப்பன் காட்டில் ஒரு வாரம்!

வீரப்பன் காட்டில் ஒரு வாரம் தங்கிவிட்டு வந்திருக்கிறது, இளம் பத்திரிகையாளர் குழு!

"நள்ளிரவு தாண்டி, அதிகாலை இரண்டு மணி முதல் நான்கு மணிக்குள் தான் நல்ல ஆழ்ந்த தூக்கம் வருகிற சமயம். யாராவது எங்களைத் தாக்க வேண்டும் என்றால், அந்த இரண்டு மணி நேரம்தான் சரியான வேளை என்று சிறப்பு அதிரப்படைக் காவலர் துரை சொன்னபோது, வர இருந்த தூக்கம் கூடப் போய்விட்டது. பயம் எங்களை அப்படியே உறைய வைத்தது!" – சோமிகா பாஸு.

"வெளிநாட்டைச் சேர்ந்தவர்களைப் பிடிப்பது என்றால், வீரப்பனுக்கு ரொம்பப் பிடிக்கும் என்றார்கள். இந்த மாதிரி தனிமையான பிரதேசத்தில், நள்ளிரவில் தங்கியிருந்த அனுபவம் இப்போதுதான் ஏற்பட்டது. - அஹ்மது ஹம்டுன்.

சோமிகா, அஹமது, நிவேதிதா கங்கூலி, ஸ்ரீமயீ ராய், ஷெரில் டீ - கூட்டோ, இன்லே வாங்மோ, நெல்சன் மோஸஸ், நாதிரா ஜெய்சிங்கே, அம்ருதா சுவாமி, அஞ்சு நாராயணன், திவேஷா குப்தா ஆகிய இளம் பத்திரிகையாளர்கள், ஏஷியன் காலேஜ் அஃப் ஜர்னலிசம் மாணவ - மாணவிகள்!



நாதிரா ஜெய்சிங்கே, திவிஷாகுப்தா, நிவேதிதா கங்கூலி, அஞ்சு நாராயணன், அம்ருதா சுவாமி

இரண்டு வாரங்களுக்கு முன், இவர்கள் வீரப்பனின் காட்டுப் பகுதிகளில், குறிப்பாக மாதேசுவரன் மலை, கோபி நத்தம், கும்டுக்கி, துளசிகிரே, இந்திகா நத்தம், மெள்டீரே கிராமங்களில், சுற்றுப் பயணம் செய்து, இந்தப் பகுதிகளில் வாழும் மக்களின் வாழ்க்கைத் தரம் எப்படி இருக்கிறது என்று அறிய, பெங்களூர் வழியாகப் போய்விட்டு வந்திருக்கிறார்கள்.

குழுவினரில் நெல்சன் மோசஸ் மட்டுமே கன்னடமும் தமிழும் அறிந்த இளைஞர். அம்ருதா சுவாமிக்கும், அஞ்சு நாராயணனுக்கும் தமிழ் தெரியும், ஓரளவு கன்னடமும்.

"ஆனால் அதிரடிப்படையைச் சேர்ந்த துரையும், மகேஷும் எங்களுக்குப் பாதுகாப்பாக வந்ததோடு, கிராமத்தினர் பேசுவதை மொழிபெயர்க்கவும் உதவினார்கள். தம்மாடி பிரிவினர் தமிழும் பேசுகிறார்கள்... வீரப்பனின் ஜாதியைச் சேர்ந்த வகுப்பினரும் இருக்கிறார்கள். இவர்கள் தமிழ் பேசுகிறார்கள்."

இவர்களைத் தவிர பிரபாத் என்ற இளைஞர், தாமாகவே முன் வந்து அதிரடிப் படையில் சேர்ந்திருக்கிறார். இவர் சமூக இயலில் மாஸ்டர்ஸ் பட்டம் பெற்றவர். இவரும் இந்த இளைஞர் குழுவுக்கு உதவியிருக்கிறார்.

"குடிசையில் பாயில் படுத்துக் கொண்டு உறங்காமல் கண் விழித்திருந்த போதுதான் பயத்தில் நடுங்கினோம். அருகேயே, சுடத் தயாரான நிலையில் துப்பாக்கியோடு துரையும், மகேஷும் இருந்தாலும், நாய்கள் குரைத்தாலோ, இலைகளின் ஓசை கேட்டாலோ, பயங்கரமாகத்தான் இருந்தது. அதிலும் ஹொகேனக்கல்லில் நாங்கள் டெலிபோன் பூத்தில் இருந்து ஃபோன் செய்யும்

போதே, ஒரு பையன் எங்களிடம் வந்தான். "உங்கள் எல்லோரையும் யாரோ கவனித்துக் கொண்டிருக்கிறார்கள். அதிலும் வெளிநாட்டுக்காரர்கள் வேறு உங்களில் இருக்கிறீர்கள்... ஜாக்கிரதை! நீங்கள் எந்த வழியாகப் போகிறீர்கள், எங்கே தங்குகிறீர்கள் எல்லாம் குறித்து வைக்கப்படுகிறது" என்றதும், மாலத்தீவைச் சேர்ந்த அஹமத் ஹம்டுன், பூட்டானைச் சேர்ந்த கின்லே வாங்மோ, ஸ்ரீலங்காவைச் சேர்ந்த நாதிரா ஜெயசிங்கே எல்லோருக்கும் கவலை தொற்றிக் கொண்டது. ஆனால் சிறப்பு அதிரடிப் படைக்கும் இந்தத் தகவல் வயர்லெஸ் மூலமாக வந்ததால், அவர்கள் "நாம் இங்கிருந்து வெகு விரைவில் பாதுகாப்பான இடத்துக்குப் போய்விட வேண்டும்" என்றார்கள். தங்கள் துப்பாக்கிகளையும் தயாராக வைத்துக் கொண்டார்கள்" என்றார் அம்ருதா சுவாமி.



• சோமிகா பாஸு, நெல்சன் மோசஸ், அஹமது, கின்லே வாங்மோ

"கிராமத்தில் பலருக்கும் சுமார் ஓர் ஏக்கர் நிலம் இருக்கிறது. அதில் பயிர் விளைச்சலைக் கவனித்துக் கொண்டு இருக்கிறார்கள். வீரப்பனின் மிரட்டலுக்குப் பயந்து கொண்டு சிலர் அவனுக்கு உணவும், உளவுச் செய்தியும் தருகிறார்கள். இவர்கள் பாடுதான் திண்டாட்டம். உதவவில்லையென்றால், வீரப்பனின் தாக்குதலுக்கு ஆளாக வேண்டும். உதவினால் அதிரடிப்படையின் 'கவனிப்புக்கு' ஆளாக வேண்டும்!" என்றார் நெல்சன்மோசஸ்.

வனத்துறை அதிகாரிகளுக்கும், பழங்குடியினருக்குமே ஒத்துப்போவதில்லை. காண்ட்ராக்ட்டை வெளியாட்களுக்குக் கொடுத்துவிட்டு, இவர்களுக்குக் கையை விரித்து விடுகிறார்களாம்!

"பழங்குடியினர் நலனுக்கோ, பாதுகாப்புக்கோ, திட்டம் ஏதும் இல்லையாமா?"

"ஒரு திட்டம் இருக்கிறதாம். ஆனால் அதைச் செயல்படுத்த இன்னும் ஒரு வருஷம் ஆகுமாம்!"

**ப**ள்ளிக் கூடத்திலும் இருபத்தைந்து, முப்பது குழந்தைகளே வந்தாலும், எழுபது பேருக்கான மதிய உணவுக்குப் பொருள்கள் கொடுக்கப்படுகின்றன. மீதியை ஆசிரியரே எடுத்துக் கொண்டு போய்விடுகிறாராம்! கேட்டால் நரித்தனமாகச் சிரிக்கிறாராம்.

"அவர்கள் குறை சொல்லுவதெல்லாம் மருத்துவமனை வசதி இல்லாததைத்தான். பதினொரு கிராமங்களுக்குமாகச் சேர்த்து, ஒரே ஒரு ஹெல்த் சென்டர் தான் இருக்கிறது. மலைப் பாதையில் நடந்து வருவதற்கே நேரம் ஆகிவிடும். ஆம்புலன்சும் கிடையாது. எமர்ஜென்சி கேஸ்கள் வந்தால், பெரிய பிரச்னைதான். அதிலும் மலேரியா அதிகமாகிக் கொண்டு வருகிறது என, டாக்டர் சந்தியா என்பவர் சொன்னார்!" என்றார் நிவேதிதா கங்கூலி.

வரதட்சணை இல்லாததால், ஆண் குழந்தையோ - பெண் குழந்தையோ, எதுவானாலும் அவர்கள் கவலைப்படுவதில்லை என்பது ஆறுதலான செய்தி.

"அவர்கள் செய்யும் சின்னச் சின்ன கைவினைப் பொருள்களை விற்க ஏதாவது ஏற்பாடு செய்யப்பட்டால், அவர்கள் கையில் கொஞ்சம் காசு புழங்கும்" என்கிறார் நாதிரா ஜெய்சிங்கே. "ஆனால் அவர்கள் எந்தக் குறையுமே இல்லாதவர்கள் போல, திருப்தியுடன் வாழ்கிறார்கள். நகர வாழ்க்கையை அவர்கள் அறிந்திராததால், எதைப் பற்றியும் அவர்கள் கவலைப்படுவதில்லை. எதுவும் பெரிய இழப்பாகவும் இல்லை அவர்களுக்கு. அந்தச் சூழ்நிலையே அப்படி இருப்பதால், யாருக்கு இழப்பு, நமக்கா, அவர்களுக்கா என்று தத்துவார்த்தமாக நினைக்கத் தோன்றுகிறது."

- சாருகேசி

படங்கள்: வெங்கடேஷ்



எழுத்தாளர் வாஸந்தி அமெரிக்கா பற்றி பகிர்ந்து கொள்ளும் எண்ணங்கள் 'கல்கி' ஆன்லைனில் இடம் பெற்று வருகின்றன. சுருக்கமாக இங்கே....



# பொண்ணுன்னா

வாஸந்தி

இங்கு இந்தியர்கள் தொலைபேசியில் பேசினால், இலேசில் போனைக் கீழே வைப்பதில்லை. முக்கியமாகப் பெண்கள் - நான் இங்கு சந்திக்கும் தமிழ்ப் பெண்கள், அதை ஓர் அமெரிக்கக் கலாசாரக் குறியீடாகக் கொண்டிருப்பதாக எனக்குத் தோன்றுகிறது. சமைத்துக் கொண்டே பேசுகிறார்கள், காரை ஓட்டிக் கொண்டே பேசுகிறார்கள், குழந்தையின் டையாப்பரை மாற்றியபடியே பேசுகிறார்கள், பேச வேண்டிய நிர்பந்தத்தில் இருப்பவர்கள் போல.

அமெரிக்கா வாழ் இந்தியப் பெண்கள் அதிக நேரம் போனில் பேசுவதற்கு, மனோவியல் காரணம் இருப்பதாகத் தோன்றுகிறது. அவர்களது ஆழ்மனத்து ஏக்கம் அதில் வெளிப்படுவதாகத் தோன்றுகிறது. வளர்ந்த சூழலை விட்டு அன்னிய தேசத்தில் இருக்கும் நிலையில், பேச்சு என்பது அவர்களுக்குத் தேவைப்படும் வடிகால். அது இல்லாவிட்டால், அநேகருக்கு இங்கு பித்துப் பிடித்துப் போய்விடும்.

பீனிக்ஸிலிருந்து ஆயிரம் மைலுக்கு அப்பாலிருக்கும் ஹூஸ்டனிலிருந்து போனில் பேசிய என் சகோதரனின் மகள் சுஜாதாவின் குரலில் தொனித்த ஆதங்கமும், ஏக்கமும் எனக்குப் புதுமையானது.

## நமது பெண்கள் செய்யும் அசகாயச் சூரத்தனம்

சுஜாதாவின் பெயரை உச்சரித்த மாத்திரத்தில் எனக்கு நினைவில் எப்போதும் வரும் தோற்றம், உற்சாகமான கவலையற்ற, மிக தன்னம்பிக்கை கொண்ட உருவம். ஜாலியான பேர்வழி. இளம் வயசு. காதலித்து மணந்த கணவனுக்கு டாக்டர் தொழில். இரண்டு சின்னக் குழந்தைகள். இந்தியாவில் இருந்திருந்தால், ஆளும் தேளுமாக ராணியைப் போல், எல்லாரையும் அதட்டி உருட்டி வேலை வாங்கிக் கொண்டிருந்திருப்பாள். பேசும்போதே

# அமெரிக்க டயரிக் குறிப்பு 4

# இளப்பமா?

பல விஷயங்களை ஒரே சமயத்தில் திட்டமிடும் ஒரு நிர்வாகி போலத் தோன்றினாள்.

திட்டமிட்டுச் செய்தால், எந்த வேலையும் சிரமம் இல்லை என்று சுஜாதா சொன்னாலும், மனித உதவி இல்லாமல் சின்னக் குழந்தைகளுடன் இங்கு வீட்டைப் பராமரிப்பது, (அதுவும் அமெரிக்க அளவு கோலின்படி) எனக்கு சுலபமாகத் தோன்றவில்லை. ஆனால் வீட்டு வேலைக்கு ஆள் இல்லை என்று இங்கு யாரும் முணுமுணுக்க முடியாது. பணக்கார அமெரிக்காவில் வீட்டு வேலைக்கு ஆள் வைத்துக் கட்டுப்படியாகாது. பல ஆயிரம் கோடி மதிப்புள்ள வால்ட் டிஸ்னி சாம்ராஜியத்தின் அதிபரின் மனைவி, ஒரு பேட்டியில் சொன்னதைப் படித்தேன். அவர்கள் வீட்டில் சமையலுக்கு ஆள் இல்லை, கார் ஓட்ட ஓட்டுனர் இல்லை. தன் கையே தனக்கு உதவி என்ற கலாசாரத்தில் பந்தாவும் இல்லை. டிஸ்னிலாண்டுக்குச் சென்றால் மற்றவர்களைப் போல அவர்களும் க்யூவில் நின்று டிக்கட் வாங்கி கொண்டு போகிறார்களாம்!

## யாரும் முக்கியமில்லை

அமெரிக்காவில் அமெரிக்க அதிபரிலிருந்து ஹாலிவுட் நடிகர் வரை, பில் கேட்ஸிலிருந்து அதிபர் போட்டிக்கு நிற்கும் அமெரிக்கப் பாமரனின் நண்பன் என்று தன்னை முன்னிறுத்திக் கொள்ளும் டெமோகிராட் வேட்பாளர் ஜான் கெர்ரி வரை, எல்லோரும் சாமான்யர்கள் என்பது சர்வ நிச்சயம். இதுவரை நான் வானளாவிய கட் - அவுட் ஒன்றைக் கூட பார்க்கவில்லை. அங்கங்கே புஷ்ஷின் முகமூடிகளை வைத்தோ, கெர்ரியின் முகமூடிகளை வைத்தோ எதிர் கோஷம் போடுவதைத் தவிர, அவர்கள் சாமான்யர்களைவிட மேம்பட்டவர்கள் என்ற எண்ணம் வரும் படியாக எந்தச் செய்தியும் இல்லை. சில தொலைக்காட்சி சானல்களில், அரசியல் மற்றும் பிசினெஸ் பெரும்புள்ளிகளைக் கிண்டல் செய்யும் விதமும், அவர்கள் பிரயோகிக்கும் மொழியும் அதிர்ச்சி தருவது – அமெரிக்கர்களுக்கு இல்லை – எனக்கு.

'ஸெடோனா' என்ற செம்மண் நிற மலைப்பிரதேசத்துக்குப் போயிருந்தேன். இங்கே நிறைய 'வைல்ட் வெஸ்டர்ன்' படங்கள் படமாக்கப்பட்டிருக்கின்றன. ஒரு சின்ன போட்டோ பிலிம் சுருள் விற்கும் கடையில் பழைய படங்களின் பெரிய ஸ்டில்



களை மாட்டி வைத்திருந்தார்கள். நான் ஒருத்திதான் அதை ஆர்வத்துடன் பார்த்ததாகத் தோன்றியது. அமெரிக்க டூரிஸ்டுகள், அதில் ஆர்வம் காட்ட வில்லை.

## இங்கும் ஆதர்ச தெய்வங்கள் உண்டு

**மா**ர்த்தா ஸ்டூவர்ட் என்று மிகப் பிரபல பிசினெஸ் பெண்மணி, சம்பத்தில் பங்குதாரர்களையும், அரசாங்கத்தையும் ஏமாற்றியதாக, நீதிமன்றத்திற்கு பொய்த் தகவல் சொன்னதாக, நீதிமன்றம் அவரைக் குற்றவாளி என்று தீர்ப்பு வழங்கியதும் அது மிகப் பெரிய அதிர்வலைகள் எழுப்பியது, எனக்கு ஆச்சரியமாக இருந்தது. மார்த்தா மிகச் சாதாரண நிலையிலிருந்து கோடீச்வரியானவர். தமது முக வசீகரத்தையும், பிஸினெஸ் திறமையையும் மூலதனமாக்கியவர். பெண்கள் பத்திரிகை, சமையல் குறிப்பு, தோட்டக் குறிப்பு, வீட்டை அழகு படுத்தல், தோட்டம் வளர்த்தல் ஆகிய நிகழ்ச்சிகளை, தாமே செய்ய ஆரம்பித்ததும் வெகு விரைவில் மத்திய வர்க்கத்துப் பெண்களின் 'வெற்றிகரமான பெண்ணின்' அடையாளமாகிப் போனார். ஆனால் அவரது தொழில் பெரிய கார்ப்பொரேட் நிறுவனமாக விரிந்த பின், பல தில்லுமுல்லுகள் அவர் செய்ததாகக் குற்றம் சாட்டப்பட்டு, பல நாட்கள் நடந்த வழக்கை மக்கள் வெகு ஆர்வத்துடன் பார்த்தார்கள். கடைசியில் மார்த்தா குற்றவாளி என்று தீர்ப்பு வழங்கப்பட்ட போது, பலருக்கு நம்ப முடியாத திகைப்பை ஏற்படுத்தியது உண்மை. அவருக்குக் குறைந்த பட்சம் ஓர் ஆண்டு ஜெயில் வாசம் கிடைக்கலாம் என்றும், சொகுசு வாழ்வு வாழும் நட்சத்திர அந்தஸ்துள்ள மார்த்தா, எப்படிப்பட்ட அறையில் சாதாரண கிரிமினல் போல் வாழ வேண்டியிருக்கும் என்றும் டீ.வி. சானல்கள் படத்துடன் விவரித்தபோது, பல பெண்கள் அழுதார்கள் என்று சொல்லப்படுகிறது.




## சுதந்திர பூமியிலும் பெண்களுக்குக் கடை நிலைதானா?

**மா**ர்த்தாவின் பிம்பம் சமூகத்தின் பார்வையில் சரிந்தது என்றாலும், அவருக்கு எதிரான முடிவை ஜூரிகள் எடுத்ததற்கு, மார்த்தா ஒரு பெண் என்பதே காரணம் என்று பரவலாக கருத்து நிலவுகிறது. ஒரு சாமான்யப் பெண், தனிப்பட்ட முறையில் முன்னேறிச் செல்வதை அமெரிக்க சமூகம் ஏற்பதில்லை என்கிறார்கள். ஒரு பெண் தனக்கு இத்தனை விளம்பரம் தேடிக் கொண்டது ஆண் வர்க்கத்திற்குப் பிடிக்கவில்லை என்கிறார்கள்.

கருத்துச் சுதந்திரம், பேச்சுச் சுதந்திரம் கொண்ட ஜனநாயக அமெரிக்காவில், பூரண செக்ஸ் சுதந்திரம் உள்ளவர்களாக தோற்றமளிக்கும் பெண்கள் வாழும் தேசத்தில், பெண்களுக்கு சமநீதி இல்லாததற்கு, சம அந்தஸ்து இல்லாததே காரணம் என்று பெண்ணியவாதிகள் தொடர்ந்து சொல்லி வருவதற்குக் காரணம் உண்டு. ''தொழில்நுட்பத் தளத்தில், சம கல்வித் தகுதியும் திறமையும் இருந்தாலும், அமெரிக்காவில் ஆண்களுக்கும் பெண்களுக்கும் ஒரே சம்பளம் கிடைக்காது என்று உங்களுக்குத் தெரியுமா?'' என்று நியூயார்க்கில் வேலை பார்க்கும் தமிழ் சிநேகிதி சௌம்யா கேட்டபோது, நான் ஆச்சரியப்பட வில்லை.

(தொடரும்)



''சார், உங்க வோட்டை மோதிரச் சின்னத்துல எனக்கு மறக்காமல் போடுங்க...''

''இதெல்லாம் மேலிடம் முடிவு பண்ண வேண்டிய விஷயம்...''

''நீங்க வேற கட்சியா?''

''இல்லப்பா... மேலிடம்னா என் மனைவி.''

''எலக்ஷன் பயத்துல ஏண்டா மொட்டை அடிச்சோம்னு இருக்கு...''

''ஏங்க?''

''பார்க்கிறவனெல்லாம் 'என்ன சார்... தேர்தல் மொட்டையா'ன்னு கேக்கிறாங்க...''



# உங்கள் வோட்டு சிரிப்புக்கே!



கூட்டணியிலே ரொம்பப் போராடி கடைசியிலே ஒரு சீட் கிடைச்சுதா?''

''பிரசாரம் பண்ற ஜீப்பிலே கிடைச்சது...''

''இன்னா 'காஸ்ட்யூம்' மாத்திகினுகீறே...?''

''எலிக்சன் வருதுல்லே... அரசியல்லே பூந்துகினுகிறேன்... பழச பேசி 'பாலிடிக்ஸ்' பண்ணிடாதே...''



- வாசு



# நடமாடும் கடியாரம்!

அதிகாலை நான்கு மணி. "ஏய்! கருப்பையா சைக்கின் சத்தம் கேட்குது. கடையைத் திற" என்று டீக்கடைக்காரர்கள் அலறியடித்து எழுந்து, அடுப்பைப் பற்ற வைப்பார்கள்.

வைரவன்பட்டிக்குள் நுழையும் போது, புலர்ந்தும் புலராத ஐந்து மணி. இவர் தெருக்களில் விட்டுப் போகும் செய்தித்தாள் வாசனை, இல்லத்தரசிகளை வாசல் தெளிக்க எழுப்பி விடும். மருதங்குடி வரும் போது, கண்ணை மூடிக் கொண்டு காலை ஆறு மணி என்று அடித்துச் சொல்லலாம். குன்றக்குடியில் தொடங்கி ஆத்தங்குடி வரையிலும், சுமார் இருபது கிராம மக்களுக்கு எஸ்.பி. கருப்பையாதான் நடமாடும் கடியாரம். ஆனால் கொஞ்ச நாட்களாக இந்த கிராமத்துச் சாலைகளில் கருப்பையாவின் மிதிவண்டித் தடத்தைத் தேடுகிறார்கள். "என்ன ஆச்சு இந்த மனுஷனுக்கு?" என்று கவலைப்படுகிறார்கள்.

எல்லா செய்தித்தாள்களையும் காலையில் கட்டுப் பிரித்து அடுக்கும் போதே படித்து விடுவார் கருப்பையா. பேப்பர் விநியோகித்துத் திரும்பும் போது, காசு கொடுத்து செய்தித்தாள் வாங்க முடியாத கிராமத்து மக்கள், "இன்னைக்கி பேப்பர்லே என்ன விசேஷம் அண்ணே?" என்று கேட்டால், சைக்கிளை விட்டு இறங்கி, நின்று நிதானமாக, ஒலிபெருக்கித் தோரணையில் செய்திகளைச் சொல்லி விட்டுப் போவாராம். ஒரு நடமாடும் ஊடகமாக வலம் வந்தவர், திடீரென்று உடல்நலக் குறைவால் முடங்கிப் போனால் கையொடிந்த மாதிரி ஆகிவிடாதா இந்த கிராம மக்களுக்கு! ஒரு கை இல்லாமல், முப்பத்தாறு ஆண்டுகள் தினசரி ஐம்பது கிலோமீட்டர் மிதிவண்டி மிதித்து, செய்தித்தாள் விநியோகித்தவர் இந்த எஸ்.பி. கருப்பையா.

பதினைந்து வயது இருக்கும். இரண்டு கிராமங்களுக்கு இடையில் நடந்த வாய்க்கால் தகராறில், சமாதானம் பேசப் போனவரின் வலது கையை மணிக்கட்டோடு துண்டித்து விட்டார்கள். ஆனால் தன்னம்பிக்கை இழந்து விடாத கருப்பையா, ஆடுகளை மேய்க்கும் வேலையைச் செய்து வந்தார். ஆடு மேய்க்கும்போது நேரத்தைப் பயனுள்ளதாகச் செலவிட, செய்தித்தாள், மற்றும் பத்திரிகைகள் படிக்கும் பழக்கத்தை ஏற்படுத்திக் கொண்டவருக்கு, செய்தித் தாள் போடும் வேலை கிடைத்திருக்கிறது. உடனடியாக ஒற்றைக் கையோடு மிதிவண்டி ஓட்டிப் பழகியிருக்கிறார். முப்பது பைசாவுக்கு சுதேசமித்திரன் விற்ற காலத்தில், மாதம் பத்து ரூபாய் சம்பளத்துக்கு 'பேப்பர் பையனாக' வாழ்க்கையைத் தொடங்கிய கருப்பையா, படிப்படியாக, வளர்ந்து, செய்தித்தாள் முகவராக உயர்ந்திருக்கிறார்.

செய்யும் தொழிலே தெய்வம் என்று நினைக்கும் கருப்பையா, விற்பனைப் பணத்தை, ஒவ்வொரு மாதமும் பத்தாம் தேதிக்குள் பத்திரிகை அலுவலகங்களுக்கு அனுப்பி விட்டுத்தான் மறு வேலை பார்ப்பாராம்.

பத்திரிகை மூலமாகக் கிடைத்து வந்த வருமானத்தில், மூத்த மகனை பொறியியல் பட்டதாரியாகவும், இளைய மகனை எம்.பி.ஏ. பட்டதாரியாகவும் உருவாக்கியிருக்கிறார். "கருப்பையாவைப் பார்த்து எல்லோரும் பாடம் படிச்சுக்கணும்" என்று உள்ளூர் மக்கள் பாராட்டுகிறார்கள்.

- குன்றக்குடி சிங்காரவடிவேல்



# "எங்கள் எம்.ஜி.ஆர். வாழ்க!"

சிவாஜி கணேசனுடன் சேர்ந்து நடிப்பதற்கு நிறைய வாய்ப்புகள் கிடைத்தது என்னுடைய அதிர்ஷ்டம். எத்தனை படங்கள்! எத்தனை விதமான கேரக்டர்கள்! அவருக்குக் கிடைத்த கதாபாத்திரங்களிலும் சரி, அவருக்கென்றே உருவாக்கப்பட்ட கதாபாத்திரங்களிலும் சரி, அவரது நடிப்பு தனி முத்திரைதான்!

சிவாஜியுடன் இணைந்து நான் நடித்த முதல் படம், 'நான் வணங்கும் தெய்வம்'. அப்போது பிரபலமாக விளங்கிய டைரக்டர் சோமு இயக்கினார். எனக்கு சிவராமகிருஷ்ணன் என்று ஒரு நண்பர். அவருக்கு சென்னை கார்ப்பரேஷனில் வேலை. வார இறுதி நாட்களை சிவராமகிருஷ்ணனின் வீட்டில்தான் கழிப்பேன்.

ஒரு தடவை, சிவராமகிருஷ்ணன் வீட்டில் இருந்த சமயம், பாலாஜியின் வீட்டிலிருந்து டெலிபோன் மூலம், சினிமா ஷூட்டிங் தகவல் கிடைத்தது. மறுநாள் காலை பத்து மணிக்கு வாகினி ஸ்டுடியோவுக்கு வரச் சொல்லி இருந்தார்கள்.

காலையில் புறப்பட்டு, சிவராமகிருஷ்ணனுடன் கோடம்பாக்கம் ரயில் நிலையம் வந்து இறங்கி, அங்கிருந்து ஒரு டாக்ஸி பிடித்து, வாஹினிக்குப் போனோம். டாக்ஸி கட்டணம் எட்டணா. டாக்ஸி பிடித்து, பந்தாவாகப் போய் ஸ்டுடியோவுக்குள் இறங்கக் காரணம் இருந்தது. நடந்து போனால், நுழைவாயிலில் இருக்கும் காவல்காரர் அத்தனை சுலபத்தில் உள்ளே விடமாட்டார்.

நானும் நண்பர் சிவராமகிருஷ்ணனும் செட்டுக்குள் நுழைந்தபோது, சிவாஜி, பத்மினி இருவரும் மேக்-அப்பில் இருந்தார்கள். படத்தின் பிரதான காமெடியன் ராமாராவ். அவருடைய உறவுக்காரர் வேஷம் எனக்கு. லஞ்ச் பிரேக் வரை நான் சும்மாதான் இருந்தேன். என்னை நடிக்கக் கூப்பிடவே இல்லை.

மதிய உணவு சாப்பிட்டு விட்டு, சற்றே ஓய்வாக சிவாஜி ஏதோ பத்திரிகையைப் படித்துக் கொண்டிருந்தார். "இவர் நாகேஷ், நாடக நடிகர்! நம்ம படத்துல நடிக்க வெச்சிருக்கேன்!" என்று அறிமுகப்படுத்தினார்.

சிவாஜி தமக்கே உரிய ஆழமான பார்வை ஒன்றை என் மேல் பதித்தார். "நாம புது நடிகனாச்சே! பெரிய நடிகரோடு நடிக்கிறோமேன்னு பயந்து,

# மாண்புமிகு டாப் டென் - 7 போட்டி முடிவு

**ராமதாஸ் பெற்றது**

**57/100**



* ராமதாஸ்

டாக்டர் அய்யாவுக்கு மார்க் போடச் சொல்லி கேட்டாலும் கேட்டோம், போட்டுத் தள்ளிட்டீங்களே!

யு.என்.ஐ. - சீனியர் நிருபர் வி. வெங்கடரமணா போட்டுக் கொடுத்த மார்க்குகளுக்கு ஏறக்குறைய சரியாவே போட்டவங்க நிறைய. அதில குலுக்கல்ல தேர்ந்தெடுக்கப்பட்டவர் :

**வி.என். கோபால்,**
ப.எண்.14 / பு.எண்.27,
முதல் குறுக்குத் தெரு, பாரத் நகர்,
மடிப்பாக்கம், சென்னை - 600 091.
**(போட்ட மார்க் 55/100)**

இவருக்கு டாக்டர் அய்யா பேரைச் சொல்லி குடும்பத்தோட திரைப்படம் பார்க்க ரூ.250/- அனுப்பி வைக்கப்படும்.

---

உன் நடிப்பைக் கோட்டை விட்டுடாதே!" என்று சொல்லிவிட்டு, தொடர்ந்து பத்திரிகையைப் புரட்ட ஆரம்பித்தார்.

எனக்குக் கொஞ்சம் 'சுருக்'கென்று ஆகி விட்டது. "சார்!" என்றேன் மெதுவாக. சிவாஜி கவனிக்கவில்லை. இன்னொரு தடவை கொஞ்சம் உரத்த குரலில் கூப்பிட்டேன்.

டைரக்டர் சோமு, சைகையிலேயே 'என்ன?' என்றார். நானும் சைகையிலேயே 'ஒண்ணுமில்லை' என்று சொல்லி விட்டு, சிவாஜியையே பார்த்துக் கொண்டு நின்றேன்.

தலையை நிமிர்த்தி, என்னைப் பார்த்தார் சிவாஜி.

"சார்! நான் புதுப் பையன்தானேன்னு, கூட நடிக்கிற நீங்க, உங்க நடிப்பைக் கோட்டை விட்டுடாதீங்க" என்றேன்.

என் பதிலை அவர் ரசித்தாரா? இல்லையா என்பது, எனக்குத் தெரியவில்லை. ஆனாலும், என் பதில் அவரைக் கோபப்படுத்தவில்லை என்பது மட்டும் நிச்சயம்.

முதல் நாளே சிவாஜியிடம் நான் கொஞ்சம் துடுக்குத்தனமாகப் பேசி விட்டேன் என்றாலும், பொதுவாக நடிகர், நடிகைகள் மட்டுமில்லை, டைரக்டர்கள், தயாரிப்பாளர்கள் கூட அவரிடம் பயம் கலந்த மரியாதையுடன்தான் பேசுவார்கள். சிலர், அவரை ஐஸ் மழையில் குளிப்பாட்ட முனைந்தால், அவர் கிண்டலாக, "ஆமாம் ஆமாம்! அண்ணே! அண்ணேன்னு இப்படி ஐஸ் வெச்சுப் பேசியே, அண்ணன் மார்க்கெட்டை அழிச்சிடுவீங்களே!" என்பார்.

சிவாஜி மகத்தான நடிகர் என்றால், எம்.ஜி.ஆர். மகத்தான மனிதர். என் மீது எப்போதுமே அவருக்குத் தனி பிரியம் உண்டு. கால்ஷீட் பிரச்னை காரணமாக, எம்.ஜி.ஆர். படங்களின் ஷூட்டிங்கு

* தலைவன் - படத்தில்
நன்றி : ஃபிலிம் நியூஸ் ஆனந்தன்

## யு.என்.ஐ. சீனியர் நிருபர்
## வி.வெங்கடரமணா போட்ட மார்க்

| | தகுதி | முழு மதிப்பெண் | ரமணா பெற்றது |
|---|---|---|---|
| 1. | தலைமைப் பண்பு (லீடர்ஷிப் குவாலிடி, வசீகரம்) | 10 | 5 |
| 2. | முடிவெடுக்கும் திறன் | 10 | 5 |
| 3. | கறைபடாத கரங்கள் | 10 | 6 |
| 4. | அரசியல் சாணக்கியம் | 10 | 7 |
| 5. | மனித நேயம் | 10 | 6 |
| 6. | தொண்டர்களோடு தோழமை | 10 | 6 |
| 7. | மேடைப் பேச்சு | 10 | 5 |
| 8. | மாற்றுக் கட்சியினரை மதிக்கும் போக்கு | 10 | 4 |
| 9. | தனிமனித ஒழுக்கம் | 10 | 6 |
| 10. | நிர்வாகத் திறமை | 10 | 7 |
| | மொத்தம் | 100 | 57 |



• வி.வெங்கடரமணா

களுக்கு நான் காலதாமதமாகச் சென்றது உண்டு. அதுபோன்ற சமயங்களில், என் இக்கட்டைப் புரிந்து கொண்டு, டைரக்டரிடம், "மற்ற காட்சிகளை எடுத்துக் கொண்டு இருங்கள். நாகேஷ் வந்தவுடன், அவர் சம்பந்தப்பட்ட காட்சிகளை எடுத்துக் கொள்ளலாம்" என்று சொல்லி விடுவார். ஆகவே, நான் தாமதமாகப் போனாலும் எம்.ஜி.ஆர். படங்களைப் பொறுத்தவரையில் ஷூட்டிங் தடைப்படாது.

எம்.ஜி.ஆரின் சிறப்பு அவரது ஈகைக் குணம்தான். பாலாஜியின் நாடகக் குழுவில் நான் நடித்துக் கொண்டிருந்த போது, ஒருநாள், சேலத்தில் நாடகம் நடைபெறவிருந்தது. காரிலேயே சேலம் சென்றோம். உளுந்தூர்ப்பேட்டை தாண்டி ஒரு கிராமத்தின் வழியே போய்க் கொண்டிருந்தபோது, எனக்கு தாகம் ஏற்பட்டது. ரோடு ஓரத்தில் இருந்த ஒரு குடிசையின் அருகில் காரை நிறுத்தினோம். நான் காரை விட்டு இறங்கியதும் ஒரு வயதான பெண்மணி, என்னிடம், 'என்ன வேணும்?' என்று விசாரித்தார். 'குடிக்கத் தண்ணீர் வேணும்!' என்றதும், குடிசைக்குள் சென்று, பெரிய செம்பில் தண்ணீர் கொண்டு வந்து கொடுத்தார். வெயில் நேரத்தில், ஜில்லென்று உள்ளே இறங்கிய அந்தத் தண்ணீர், ரொம்ப இதமாக இருந்தது.

நன்றி சொல்லி விட்டுப் புறப்படுவதற்கு முன், பாலாஜி, தமது பர்ஸிலிருந்து நூறு ரூபாய் நோட்டை எடுத்தார். அதை அந்தப் பெண்மணியின் கையில் கொடுத்தார். அதை வாங்கிக் கொண்ட அவர், ஆச்சரியத்துடன் ரூபாய் நோட்டையே சில விநாடிகள் பார்த்துக் கொண்டு இருந்தார். சட்டென்று ரூபாய் நோட்டைப் பிடித்தபடி, தமது இரு கைகளையும் தலைக்கு மேலே தூக்கி, பாலாஜியைப் பார்த்து, "எங்கள் எம்.ஜி.ஆர். வாழ்க!" என்றார். சில நிமிடங்களுக்கு ஒன்றுமே புரியாமல் குழம்பிப் போனோம். அப்புறம் விஷயத்தை நாங்களாகவே புரிந்து கொண்டோம்.

அந்தக் கிராமத்து மூதாட்டியைப் பொறுத்தவரை, 'எம்.ஜி.ஆர்.' என்கிற மனிதர் மட்டும்தான் முன்பின் தெரியாத ஏழை, எளிய மக்களுக்கும் உதவி செய்வார்; ஏழை மக்களுக்கு ஒருவர் உதவுகிறார் என்றால், அது நிச்சயமாக எம்.ஜி.ஆரைத் தவிர வேறு ஒருவராக இருக்கவே முடியாது என்பது, அவரது மனத்தில் ஆழமாய்ப் பதிந்து விட்டது. இவரைப் போன்ற நம்பிக்கை கொண்ட ஏழை எளியவர்கள், இன்னமும் நிறையப் பேர் தமிழ்நாட்டில் இருக்கிறார்கள்.

(சிரிப்பு தொடரும்)

அனாதைக் குழந்தைகளைத் தத்தெடுப்பார்கள்; ஏழைக் கிராமங்களைத் தத்தெடுப்பார்கள்; ஆதரவற்ற முதியோர்களைக் கூட தத்தெடுக்கிறார்கள். ஆனால் ஒன்பதாம் வகுப்பு படிக்கிற குழந்தைகளைத் தத்தெடுக்கும் 'அடாப்ட் டு வின்' என்ற வித்தியாசமான அமைப்பு ஒன்றை ஆரம்பித்திருக்கிறார் கல்வியாளரும், சமூக சேவகியுமான கீதா பிரபு.

"சமீப காலமாக, பெற்றோர்களும், ஆசிரியர்களும் 'படி படி' என்று டீனேஜ் குழந்தைகளை வறுத்தெடுக்கிறார்கள். குழந்தைகளும் எப்போதும் புத்தகமும் கையுமாக முட்டிக் கொண்டு, ப்ளஸ் டூ பரீட்சையில் நூற்றித் தொண்ணூற்றியெட்டு, இருநூறு என்று வாங்கிக் குவிப்பார்கள். ஆனால் தொழில் சார்ந்த படிப்புகளுக்கான நுழைவுத் தேர்வில், கோட்டை விட்டு விடுவார்கள். குறிப்பாக, ஐ.ஐ.டி. நுழைவுத் தேர்வில் வெற்றி பெறும் தமிழ்நாட்டு மாணவர்களின் எண்ணிக்கை, வருஷா வருஷம் குறைந்து கொண்டே போகிறது. சென்னை ஐ.ஐ.டி.யில் தமிழ்நாட்டு மாணவர்களை விட, வெளிமாநில மாணவர் சதவிகிதம் அதிகம். ஏன், தமிழ்நாட்டில் புத்திசாலிக் குழந்தைகளே

# வெற்றி வேண்டுமா? தத்துக் கொடுங்க!

இல்லையா?" என்ற, கீதா பிரபுவின் சீரிய ஆராய்ச்சியின் முடிவுகள் தாம், 'அடாப்ட் டு வின்' அமைப்பைத் தொடங்குவதற்கே காரணமாக இருந்ததாம்.

"ப்ளஸ் டூ பரீட்சைகளைப் பொறுத்தவரை, மனப்பாடம் செய்யும் திறமை இருந்தாலே, மதிப்பெண்களை களையாக அள்ளி விடலாம். ஆனால் டி.என். பி.சி.ஈ.ஈ., போன்ற மாநில அளவிலான பொறியியல் மற்றும் மருத்துவக் கல்விக்கான நுழைவுத் தேர்வையோ, ஏ.ஐ.ஈ.ஈ.ஈ., பி.எம்.பி.டி., ஏ.எஃப்.எம்.ஸி. போன்ற இந்திய அளவிலான காம்படிடிவ் பரீட்சை நுழைவுத் தேர்வுகளையோ எழுதும் போது, உரு அடிக்கிற டெக்னிக் மட்டும் உதவாது. 'கான்செப்ட் பேஸ்ட் லெர்னிங்' மிக அவசியம். அப்ளிகேஷன் டெக்னிக்ஸ் தெரிந்திருந்தால், எந்தவிதமான உயர்மட்ட நுழைவுத் தேர்வையும் சுலபமாக எழுதி விடலாம். ஆனால் இங்கே உள்ள பெரும்பாலான பள்ளிகளில், இவற்றைச் சொல்லித் தர நேரமிருப்பதில்லை. ஆந்திரா, மகாராஷ்டிரா போன்ற இடங்களில், இந்தப் பயிற்சியை பதின்மூன்று வயதிலேயே ஆரம்பித்து விடுகிறார்கள். அந்த மாநில பெற்றோர்களும் இந்த விஷயத்தில் ரொம்ப சீரியஸாக இருக்கிறார்கள். தமிழ்நாட்டைப் பொறுத்தவரை, பெற்றோர்களுக்கு ஆசை இருக்கிறது. மாணவர்களுக்கும் உயரிய நோக்கம் இருக்கிறது. ஆனால் சரியான முனைப்பு இல்லை" என்று வருத்தப்படுகிறார்.

'அடாப்ட் டு வின்' அமைப்பின் இன்னொரு முக்கிய சிறப்பம்சம்... 'சாஃப்ட் ஸ்கில்ஸ்' டெவலப்மெண்ட்.



• 'எய்ம்ஸ்' - நிர்வாக இயக்குநர் கீதா பிரபு

"நான் நல்லாப் படிக்கிறேன். ஆனால் ஞாபகம் வைச்சுக்க முடியலை."

"படிச்சதெல்லாம் ஞாபகமிருக்கு. ஆனால் பாயிண்டா எழுதத் தெரியலை."

"கொஞ்ச நேரம் படிச்சதுமே மனக் களைப்பு வந்துடுது..."

"என்னோட கையெழுத்து மோசம். அழகா ப்ரெஸண்ட் பண்ணத் தெரியலை."

- போன்ற குறைகளைக் களைந்து, கிரகித்துக் கொள்ளும் தன்மையை வளர்த்து விடுவதுதான்', ஸாஃப்ட்

ஸ்கில்ஸ்.

"இதெல்லாம் தவிர, பரீட்சையை எழுதுவது எப்படி?' எனவும் தனிப் பயிற்சி தருகிறோம். உதாரணத்துக்கு, ப்ளஸ் டு வரை நம்முடைய குழந்தைகள் ஃபிஸிக்ஸைத் தனியாகவும், கெமிஸ்ட்ரியைத் தனியாகவும் பரீட்சை எழுதியே பழகியிருப்பார்கள். ஆனால் நுழைவுத் தேர்வில் இரண்டையும் சேர்த்து, ஃபிஸிகல் சயின்ஸஸ் என்று ஒரே தாளாகத் தருவார்கள். அப்போது மூளையின் டிராக்கை உடனே மாற்றி, வேறு தளத்தில் இயங்க, முறையான பயிற்சி வேண்டும். 'கோடிங் ஷீட்' என்ற முறை பழகவே பலருக்குத் தடுமாற்றமாகி விடுகிறது. இதெல்லாம் அடிப்படையான விஷயங்கள். இது போன்ற நிறைய அம்சங்களைச் சொல்லித் தரவே அனுபவமிக்கப் பேராசிரியர்களும், வெற்றி பெற்ற ஐ.ஐ.டி. மாணவர்களும் எங்களுடன் களமிறங்கியிருக்கிறார்கள்" என்கிறார்.



• ...பட்டறையில்




• பயிற்சியில்...

அது என்ன, ஒன்பதாம் கிளாஸ் மாணவர்களை விசேஷமாகத் தத்தெடுக்கும் முறை?

''எங்களுடைய 'எய்ம்ஸ்' கல்வி நிறுவனத்தில், இந்தியாவில் உள்ள அனைத்து சிறப்புப் படிப்புகளுக்கும் நுழைவுத் தேர்வுப் பயிற்சிகள் தரப்படுகின்றன. ஆனால் பல மாணவர்கள், பரீட்சை நெருங்கும் சமயத்தில்தான் இது போன்ற மையங்களை நாடுவார்கள். அப்போது அவர்களுக்குப் பாடமும் சொல்லிக் கொடுத்து, சாஃப்ட் ஸ்கில்ஸ்களிலும் பயிற்சி தந்து, மூளையை ட்யூன் செய்ய அவகாசம் இருக்காது. அதனால்தான் ஒன்பது அல்லது பத்தாம் வகுப்பிலிருந்தே, குழந்தைகளை சிறப்புக் கல்வி என்ற இந்த முறையில் பயிலப் பழக்கிவிட்டால், அவர்கள் நுழைவுத் தேர்வுகளை எல்லாம் ஊதித் தள்ளி விடுவார்கள்'' என்கிறார் கீதா பிரபு.

'அடாப்ட் டு வின்' திட்டத்தின் கீழ், தற்போது அறுபது குழந்தைகளைத் தேர்ந்தெடுத்து, தயார் செய்து கொண்டிருக்கிறார்கள். அவற்றில் சில ஏழ்மையான குழந்தைகளுக்கு, உதவித் தொகையும் தந்து படிக்க வைக்கிறார்களாம்.

"டாக்டர் அப்துல் கலாமின் கனவுதான் எங்களுடைய கனவும். இன்னும் மூன்று வருடங்களில் தமிழகத்திலிருந்து நிறைய ஐ.ஐ.டி. தொழில்நுட்ப நிபுணர்கள் உருவாகியிருப்பார்கள். கனமானப் பறவைகளை, இலேசான இறகுகள்தானே மேலே தூக்குகின்றன? அதேபோல, நாளைய விஞ்ஞான உலகத்தை, இந்தத் தத்துக் குழந்தைகள் நிச்சயம் உயர்த்துவார்கள்'' என்கிறார் தாய்க்கே உரிய பாசத்துடன்.

— டாலி

# ஹலோ, நீங்க சுகமா?



"ஓரே டென்ஷன்... போய் ஒரு காபி குடிச்சிட்டு வந்தா, கொஞ்சம் ரிலாக்ஸ் ஆகும்..." என்றுதான் நிறைய அலுவலர்கள் கடைகளுக்கு நகர்கிறார்கள். அமெரிக்கா ஆய்வுக்குழு தந்திருக்கும் அறிக்கை, இதற்கு நேர்மாறாக இருக்கிறது. இந்தக் காபி இடைவேளைகள், வேலையின் பளுவால் ஏற்படுகிற மன அழுத்தத்தை மேலும் அதிகமாக்குகின்றன என்பதுதான் அவர்களுடைய முடிவு. காபி குடித்து வந்ததும் வேலை அதிகமாகச் செய்ய வேண்டும் என்ற வேகம் எழுவதால், அந்தச் செயல் மன அழுத்தத்தை அதிகமாக்குகிறது என்கிறார்.

குழுவாக வேலை செய்கிற ஆண்களைவிட, தனிமையில் வேலை செய்கிற ஆண்கள் இந்த 'காபி மன அழுத்தத்தை' அதிகம் பெறுகிறார்களாம். ஆனால் ஒரு சுவாரசியம். இந்த காபி இடைவேளைகளில் பெண்களின் மன அழுத்தம் அதிகமாவதில்லை. குறைந்து விடுகிறதாம். அவர்கள் கோடை விடுமுறைக்கு வந்த நாத்தனாரைத் தாக்கிப் பேசுவதிலிருந்து, மெகா சீரியல் விமர்சனத்துக்குச் சட்டென்று டாபிக் மாறிவிடுவதுதான் காரணம்.

ஆஸ்திரேலியாவின் ஆய்வாளர் டாக்டர் கேவன் மெக்நேலி, சிட்னியில் இருக்கிற ஸ்கூல் ஆஃப் சைக்காலஜியில் மற்றொரு குழுவை வைத்து இதே காபி ஆய்வை நடத்தினார். விளைவு அதே! காபி தளர்வைப் போக்கி சுறுசுறுப்பாக்க உதவுகிறது, என்று நாம் நினைப்பதற்கு எதிராக இயங்குகிறது என்கிறார் அவர்.

இவருடைய ஆய்வுப்படி, காபி குடிப்பது சில வேலைகளில் இருக்கும்போது நல்லவிதமான விளைவை ஏற்படுத்துகிறதாம். உதாரணம் என்று அவர் கைகாட்டுவது, டிரைவிங். வாகனம் ஓட்டும்போது காபி குடிப்பது நல்லது என்கிறார். அடுத்தமுறை உங்கள் கார் டிரைவர் காபிக் கடையோரம் காரை நிறுத்தும்போது, உற்சாகப்படுத்துங்கள். உங்களுக்கும் உங்கள் பயணத்தில் எதிர் வருபவருக்கும் மிக நல்லது.

சரி... இப்படி உலகம் முழுக்க மக்கள் குடித்துத் தள்ளுகிற காபியில் அப்படி என்னதான் இருக்கிறது?



காபிக் கொட்டைகள் கிடைக்கிற மரத்தின் பெயர்'காபி அராபிகா' என்பது. சில நாடுகளில் காபியை 'கஹாவா' என்கிறார்கள். உருது மொழிப் பெயர் போலிருக்கிறது. உலகத்திலேயே நம்முடைய தென்னிந்தியாவில்தான் காபி அதிகம் குடிக்கப்படுகிறதாம். அதிலும் மைசூர், கேரளா மற்றும் நம்முடைய சிங்காரச் சென்னையில்தான் காபிக்கு கிராக்கி!

மருத்துவ ரீதியாகப் பார்த்தால், காபி கொஞ்சம் கெட்ட வேலைகளை உடலுக்குச் செய்

**வஸந்த் செந்தில்**

கிறது... காபியில் இருக்கிற 'காஃபின்!' சுலபமாக நமது உடலை பாதிக்கிற விஷத்தன்மை கொண்டது. காபி குடிப்ப தால் இருதயம், வயிறு, இரண்டும் செயல்பாடுகளில் வீழ்ச்சி அடைவதை, முதன்முதலில் மேற்கு ஜெர்மனி ஆய் வாளர்கள் உலகத்துக்கு அறிவித்தார்கள்.

காபி குடித்த உடனே, அது இதயத் தின் துடிப்புகளைத் தேவையில்லாமல் அதிகமாக்குகிறது. இந்த அதிக வேலை, இதயத்தைத் தளர்வடையச் செய்கிறது. அதிக காபி மெல்ல நரம்பு மண் டலத்தின் செயல்பாடு களில் அதிகப் பிரசங்கித் தனமாகக் குறுக்கிடுகிறது. சருமத்தைப் பாதிக்கிற தன் மைகூட காபிக்கு உண்டு. குறிப்பாக 'லூக்கோடெர்மா' என்ற வெள்ளைத் திட்டுகள் உள்ள நோயாளிகள், கண்டிப்பாக காபி குடிக்கக் கூடாது என்று அறிவுறுத் தப்படுகிறார்கள். காரணம், காபி உடலில் சமநிலையில் இருக்கிற திரவ அளவைப் பாதித்து, சருமத்தில் கை வைத்துவிடு கிறது.

காபியில் காஃபின் தவிர, டேனின் என்ற மற்றொரு நச்சும் உண்டு. இந்த இரண்டு நச்சின் மிகப் பெரிய அபாயமே,




வெளிப்புறத்தில் பயன்படுத்தும்போது சருமத்தை அழகாக்கி ஒளிரச் செய்கிறது. மார்லின் மன்றோ தினமும் காபி - சோப் கலவையைப் பயன்படுத்திக் குளித்தார் என்று அவருடைய வாழ்க்கை வரலாறு நூலில் (A life - Marlin) இருக்கிறது. சில நேரங்களில் சளி, மூக்கடைப்பு, Pleurasy என்கிற மூச்சுக் குழல் அழற்சி போன்ற வற்றிற்கு காபியுடன் வேறு சில

# ஸ்ட்ராங்காகககக

அவை வயிற்றில் சுரக்கிற சுரப்புத் திரவங்களை இறைத்து விடுவதுதான்.

"என்ன சார்... சொல்லிகிட்டே போறீங்களே..." என்று கவலைப்படுகிறீர் களா...? காபியில் எனக்குத் தெரிந்த நல்லது, இப்போதைக்கு ஒன்றே ஒன்று தான். உலகம் முழுக்க தயாரிக்கப்படுகிற ஹேர்டையில் காபி பயன்படுத்தப் படுகிறது. தவிர, காபித் துகள்களை பல்வேறு அழகுக்கலை நிலையங்கள் பயன்படுத்துகின்றன. காரணம், காபி

மருந்துகளைப் பயன்படுத்துவது பல னளிப்பதாக அறிவித்திருக்கிறார்கள்.

காபியின் அபாயங்களையும், காபி இடைவேளையின் எதிர்மறை விளைவு களையும் உங்களுடன் பேசிக் கொண் டிருந்ததில் களைப்பாக இருக்கிறது. ஒரே ஒரு காபி குடித்துவிட்டு வருகி றேன்... நாளையிலிருந்து நிறுத்தி விடு கிறேன்...

(தொடரும்)

ஹம்ஸா மொய்லி....

பெயரைச் சொன்னாலே ஏதோ வண்டின் ரீங்காரம் போல இனிமையாக ஒலிக்கிறது. ஜூன் மாதம் ரிலீஸாகும் 'சிருங்காரம்' படத்தின் இரு கதாநாயகியரில் ஒருவர். லால்குடி ஜெயராமனின் இசை, பாலிவுட் புகழ் சரோஜ் கானின் நடன இயக்கம், பெண் இயக்குநர் சாரதா ராமனாதனின் முதல் படைப்பு, திரைக்கதை இந்திரா சௌந்தரராஜன்... என பல பரபர பாப்புலாரிட்டிகள் சம்பந்தப்பட்டிருக்கிற படம். 1920களின் தேவதாசிகளை மையமாகக் கொண்ட இந்த சினிமாவைக் காண, பலர் ஆவலாக எதிர்நோக்கியிருக்க, நாம் ஹம்ஸாவைத் தேடி ஓடினோம்.

'குச்சி குச்சி ராக்கம்மா' பாட்டின் வரிகள் இவரைப் பார்த்துத்தான் தோன்றியிருக்க வேண்டும். உடனே தேவை 4.5% பால் என்பது போல் தேகம். பனிச்சென்ற கனையான முகம். கண் வழிய மை. ஜீன்ஸ் பாண்ட். மேலே குர்தி. சிம்பிள் மொய்லியாக இருக்கிறார். பெரிய இடத்துப் பெண். சுற்றிலும் பாதுகாப்புப் படை, எடுபிடிகள்... எதுவும் இல்லை.

"சின்ன வயசுலேர்ந்து எங்க வீட்ல எப்பவுமே கூட்டம். தொண்டர்கள், மீட்டிங்னு வருவார் போவார் ரகம். அப்பாவை ஃப்ரீயா பார்க்கவே முடியாது. எக்கச்சக்க பிஸி. ஆனாலும் நான் முழுக்க சுறுசுறுப்பா இருப்பார். அரசியல்வாதி, அட்வகேட், எழுத்தாளர், நாவலாசிரியர்... என பன்முகங்கள். நா சினிமால நடிக்கறேன்னு சொன்னபோது தடுக்கவேயில்லை. 'எது செய்தாலும் நேர்மையாக இரு. கடுமையாக உழை'ன்னுதான் சொன்னார். எங்கப்பாவ நெனச்சா ரொம்பப் பெருமையா இருக்கு..." சொல்ல ஆரம்பிக்கிறார் ஹம்ஸா. அப்பா யார்?

கர்நாடக முன்னாள் முதல்வர் வீரப்ப மொய்லியின் அன்பு மகள்தான் ஹம்ஸா மொய்லி.

"உங்க அரசியல் பிரவேசம் எப்போது?" என்று கொக்கிப் போட்டால்...

"நானா...? நடனம் நடிப்பு, இதுதான் இப்போதைக்கு. நாளை என்ன ஆகும்னு சொல்ல முடியாது" சஸ்பென்ஸ் வைக்கிறார்.

ஹம்ஸாவுக்கு தமிழ் சினிமா ஆசை எப்படி வந்தல்லோ வந்தல்லோ?

"என்னுடைய நாட்டிய குரு, பத்மினி ரவி 'சிருங்காரம்' படத்தின் தயாரிப்பாளர்களில் ஒருவர். படத்தைப் பற்றி இப்போது நான் எதுவும் சொல்ல மாட்டேன். காமவல்லி என்ற கதாபாத்திரம். இளம்பெண்ணிலிருந்து மூதாட்டி வரையிலான ஒரு காரெக்டர். புடைவைதான். அங்கம் கொஞ்சம் கூடத் தெரியாது. இதுக்கு மேல கேக்காதீங்க..." நழுவுகிறார்.

# இலக்கறே

ஹம்ஸாவை அன்புடன் எல்லோரும் கூப்பிடுவது 'அம்லி'. நாட்டியத்தைத் தவிர களறிபயட்டு, ஸ்கூபா டைவிங், (உலகில் எங்கு வேண்டுமானாலும் ஸ்கூபா டைவிங் செய்ய அனுமதி உண்டு. கார்டு காண்பிக்

கிறார்) யோகா... என சகலமும் தெரியுமாம்!

ஹம்ஸாவின் சகோதரி சுஷ்மா கன்னடப் பட இயக்குநர். ஹம்ஸா - ஹர்ஷா இரட்டையர்கள். சகோதரர் ஹர்ஷா லண்டனில் படிக்கிறார். தாய் மாலதி மொய்லி, தமக்குத் தூணாக நின்று உதவுவதை நினைத்துப் பூரிக்கிறார்.

"மீனிங்ஃபுல் சினிமாவில் நடிக்கணும். மணிரத்னம் படம் பண்ணணும், சூர்யாவுடன் சேர்ந்து ஆக்ட் கொடுக்கணும். ரெகுலர் மரத்தைச் சுத்தி, டூயட் பாடக்

# அம்ஸிஈஈஈ

கூடாது, சான்ஸ் கிடைச்சா கமலுடன் சேர்ந்து நடிக்கணும்" என்று பல திட்டங்கள் வைத்திருக்கிறார்.

முதல் சினிமா ஹிட்டாகப் பிரார்த்தனை செய்கிறாரா? "நமக்கு மேல் ஒரு சக்தி உண்டு. அதை நம்பறேன். மற்றபடி பெரிசா கடவுள் நம்பிக்கை கிடையாது. பக்தியில் பயபக்தி இருக்கக் கூடாது" தத்துவமாகப் பேசுகிறார்.

கலக்கறே அம்ஸி!

- லதா சேகர்

● எம்.குணசேகரன், வேலாயுதம் பாளையம்

? 'என்னிடமிருந்து மக்களையும் மக்களிடமிருந்து என்னையும் எவராலும் பிரிக்க முடியாது' என முதல்வர் ஜெ. கூறியுள்ளாரே?

! அவரே செய்து முடிக்கும் காரியங்களை, யாரிடமும் நம்பி அவர் கொடுப்பது கிடையாது என்பது தெரிந்ததுதானே!



● திடீர்ச் சகிப்பமை!

● மகா, திருப்பூர்

? மிகச் சிறந்த பிளஸ் டூ மாணவர்களின் விடைத்தாள்களைப் புத்தகமாக வெளியிட கல்வித் துறை முடிவு செய்திருப்பதை வரவேற்கலாம் அல்லவா?

! பரீட்சை பாஸ் பண்ணுவதே இலட்சியம் என்கிற நமது பிற்போக்கான கல்வி முறையை அமல்படுத்துகிறவர்கள் இப்படித்தான் அபத்தமாகச் சிந்திப்பார்கள். மெய்யான கல்விமுறை, பரீட்சைக்கு மட்டுமே முக்கியத்துவம் தராது. மாணவரின் ஒட்டுமொத்தமான உடல், மன, அறிவு வளர்ச்சியில் - முயற்சியில் கவனம் செலுத்தும்.



● சில்லறைச் சிந்தனை!



● நிர்பந்த உபதேசம்!

● சி.சசிகலா, விருதுநகர்

? மு.க. ஸ்டாலினை தி.மு.க. தலைமைப் பொறுப்புக்கும், முதலமைச்சர் பதவிக்கும் தயார்ப்படுத்தி வருவதாக ஆலடி அருணா கூறியிருப்பது பற்றி...?

! ஸ்டாலினை மற்றவர்களும் தயார்ப்படுத்த முடியும்; தம்மைத்தாமே தயார்ப்படுத்திக் கொள்ளவும் அவரால் முடியும். ஆனால், பதவியில் அவரை அமரச் செய்ய மக்களால்தான் முடியும். அவர் தகுதி உள்ளவர் என்று மக்கள் நினைத்தால் வந்துவிட்டுப் போகிறார்.

● இரா. மகாராசன், ஆரல்வாய்மொழி

? ஈரோட்டுப் பெரியாரும் காஞ்சிப் பெரியவரும் அடிப்படையில் ஒரே வழியைப் பின்பற்றியவர்கள்தான் என்று காளிமுத்து கூறியிருப்பது பற்றி...?

! என்ன பண்ணுவது? அவரால் நடந்து வந்த பாதையையும் மறக்க முடியலை; அம்மாவின் தயவையும் துறக்க முடியலை! விளைவு : இந்தப் புதிய அத்வைத உபதேசம்! சங்கரா! சங்கரா!

● தங்கம், சென்னை - 73

? தண்ணீர்ப் பஞ்சம் தீர்க்க எந்தக் கட்சி பாடுபடும்?

! "காவிரிப் பிரச்னை தீரக் கூடாது; நீண்டுகொண்டே போக வேண்டும் என்பதுதான் எல்லா அரசியல்வாதிகளின் விருப்பமும்; அப்போதுதானே அதில் அவர்கள் அரசியல் ஆதாயம் தேட முடியும்!" என்ற

# திருப்பதி ஏழுமலையான்

கல்கி வாசகி ஆர்.வஸந்தா (சென்னை-80)வின் கருத்து உண்மையாகி விடக் கூடாது என்பதே தராசின் பிரார்த்தனை.

● ப.கா.மணிமொழியன், நாகமலை ★

? 'மொபைல் போன் வாங்கிவிட்டால் இளம் பெண்கள் பின்னாலேயே வந்துவிடுவார்கள்' என்பது போன்ற கருத்துடனான டி.வி. விளம்பரங்கள் அதிகரித்துவிட்டனவே?

! மொபைல் போன் வரைக்கும் போவானேன். ஒரு பாட்டில் குளிர்பானத்தைக் கொண்டு பெண்களைக் கவர்ந்துவிடலாம் என்பது போன்ற விளம்பரங்கள் ஏராளம். இவற்றிடையே அசட்டு ஆண் மகன் ஒருவனை, சுமார் அரை டஜன் பெண்கள் அடுத்தடுத்து கன்னத்தில் அறைவதாகக் காட்டப்படும் உஷா ஃபேன் விளம்பரமும், பெண்மையைக் கேவலப்படுத்தவே செய்கிறது.

● ரேவதிப்ரியன், ஈரோடு

? ஜயேந்திரர் - ஜீயர் புதிய சர்ச்சை பற்றி...?

! வருந்தமளித்த, தேவையற்ற சர்ச்சை. எழுந்த வேகத்தில் அடங்கியதுதான் பெரிய மகிழ்ச்சி!

● கே.ஆர். ஜெயலக்ஷ்மி, சென்னை

? 'இரண்டு குழந்தைகளுக்குமேல்

• தன்முனைப்புத் தலைவி!

# சிவனா? விஷ்ணுவா?

பெற்றால் அரசு வேலை இல்லை, தேர்தலில் போட்டியிடத் தடை...' என்று அத்வானி யோசனை வெளியிட்டுள்ளாரே. இதற்கு எந்த அளவுக்கு ஆதரவு இருக்கும்?

! அத்வானி போன்ற பெருந்தலைவரின் நேரம் இதுபோன்ற சில்லறைச் சிந்தனைகளில் வீணாவதை நாம் எதிர்பார்க்கவில்லை. அவர் சிந்தனை நாடு தழுவியதாக, அதன் முன்னேற்றம் - ஒற்றுமை அளாவியதாக அமைதல் அவசியம்.

● வி. லக்ஷ்மி ராமன், சென்னை - 73

? திருப்பதி ஏழுமலையான் சிவனா? விஷ்ணுவா?

! தாழ்சடையும் நீண்முடியு மொண் மழுவுஞ் சக்கரமும் சூழரவும் பொன்னாணுந் தோன்றுமால் - சூழும் திரண்டருவி பாயுந் திருமலைமே லெந்தைக்கு இரண்டுருவு மொன்றா யிசைந்து.



• சர்ச்சையைத்...



• ... துறக்காமல்!...

● கா.அ.தாஜ்மஜீத், திருமயம்

? ஆந்திராவில் அமைச்சரின் கணவரை நக்ஸலைட்டுகள் கட்டுக்கொன்ற கொடூரம் பற்றி...?

! வன்முறை இயக்கங்களும் பயங்கரவாதமும் கொடூரச் செயல்களுக்குப் பழகிப் போகின்றன. அப்புறம், அரசியல் நோக்கு, இறுதி இலட்சியம் எல்லாமே பின்னணிக்குப் போய், கொலை வெறி மட்டுமே ஓங்கி முன்னிலைப்படுகிறது. ஆந்திரா நக்ஸலைட்டுகள் மட்டுமல்ல; காஷ்மீர், ஸ்ரீலங்கா, இஸ்ரேல், ஸ்பெயின், மாஸ்கோ எல்லா இடங்களிலும் இதே கதைதான்.

●எஸ்.சக்தி, விக்கிரமசிங்கபுரம் ❑

? அதிருப்தியாளர்களின் சலசலப்பு அ.தி.மு.க.வில் மட்டும் இல்லையே...?

! சலசலப்பு இல்லாததால் அதிருப்தி இல்லை என்று சொல்ல முடியாது. அதிருப்தியை பகிரங்கமாகத் தெரிவிப்பதில் அர்த்தமில்லை. தலைமையின் கண்டனம் தான் கிடைக்கும்; கடைக்கண் கவனம்கூட அதற்குக் கிடைக்காது என்பது அ.தி.மு.க. தொண்டர்களுக்குத் தெரியும்.

❑ ரூ.100 பரிசு பெறுபவர் :
எஸ். சக்தி, 100 மேட்டுத் தங்கம்மன் கோவில் தெரு, விக்கிரமசிங்கபுரம், நெல்லை மாவட்டம் - 627 425.

★ ரூ.50 பரிசு பெறுபவர் :
ப.கா. மணிமொழியன், 7/1286, சுப்ரமண்ய சிவா தெரு, நாகமலை, மதுரை - 625 019.

# மாமாவின் காதல்!

உஷா ப்ரியா

"இந்தப் பொம்மையைத் தூக்கித் தூரப் போடு, இல்லைன்னா எங்காவது கண்காணாத இடத்திலே கொண்டு வை..." அம்மா சொல்லிக் கொண்டே அந்தக் கரடி பொம்மையைத் தூக்கித் தூர எறிந்தாள்.

"உன் கோபத்தை என் பொம்மை மேல காட்டாதே. சரியான இடத்தில், சரியான விதத்தில் கோபப்படுறதுதான் அழகு. சும்மா ஒண்ணும் இல்லாததுக் கெல்லாம் தொண்டை வலிக்கக் கத்துனா, அதுக்கு மதிப்பே கிடையாது..." காயத்ரி, அம்மாவை வார்த்தைகளால் சுட்டெரித்தாள்.

"இதென்னடி பொம்மை வைச்சுக்கிட்டு விளையாட்டு? காலேஜ் படிக்கிற, சின்னப் புள்ளையில்லை."

"இது மாமா வாங்கித் தந்த பொம்மை. நான் அவர் நினைவா வைச்சிருக்கேன்" என்றேன், பொம்மையை இறுகப் பிடித்துக் கொண்டு.

"இன்னொரு முறை அவன் பேச்சை நீ எடுக்காதே; இருக்கு ஒனக்கு அறை" என்றாள் அம்மா காட்டுக் கத்தலுடன்.

நான் மேற்கொண்டு ஏதும் பேசவில்லை. அந்த பொம்மையை கண்ணாடியின் அருகில் கொண்டு வைத்தேன்.

எப்படி மறக்க இயலும் மாமாவை?

**மா**மா... எல்லாமே மாமாதான் எனக்கு.... அது ஒரு காலம்... என்னைத் தரையில் கால் வைக்க விட மாட்டார். அவ்வளவு பிரியம். சதா தூக்கி வைத்துக் கொண்டு விளையாடுவார். என்ன கேட்டாலும், மறுநாளே வாங்கிக் கொண்டு வருவார்.

எங்கள் வீட்டுக்கு வருகின்றவர்கள் ஏதேதோ வாங்கி வந்து தந்ததில், வீடெல்லாம் பொம்மைப் பொருள்களாய் நிறைந்திருக்கும்.

ஆனால் என்னிடம் கரடி பொம்மை மட்டும் இல்லை. உருட்டி விட்டாலும், சாய்த்துப் போட்டாலும் ஸ்டைலா எழுந்து நிக்குமே, அந்தக் கரடி பொம்மை.

மாமாவுடன் கடைத் தெருவுக்குப் போன போது, அதை வாங்கித் தரச் சொல்லிக் கேட்டேன்.

"சம்பளம் வரட்டும்டா... கண்ணு... நிச்சயமா வாங்கித் தரேன். என் பட்டுக் குட்டிக்கு இல்லாததா?"னு சொன்னாரு.

மறுநாளும் ஞாபகப்படுத்தி அழுதேன். "கரடி பொம்மை தானே. டங்குன்னு வந்து நிக்கும் பாரு" என்று கன்னத்தில் முத்தமிட்டு விட்டுப் போனார். அதுதான் கடைசி முத்தம்.

**நா**ன் பொம்மைக்காகக் காத்திருந்த அந்த மாலை வேளையில், அம்மா புரிந்தும் புரியாததுமாய் அப்பாவிடம் கோபமாய்ப் பேசிக் கொண்டிருந்தாள்.

"அவன் அந்த சிலுக்குச் சிங்காரியோட எப்படிக் குடும்பம் நடத்திடறான்னு பார்த்துடறேன். அவள் கொண்டை முடியைப் புடிச்சி அடிக்கிற அடியில, அவனை விட்டு அவ போகலைன்னா பாருங்க..." என்று கத்தினாள் அம்மா.

"இரண்டு பேரும் ரொம்பக் காலமா காதலிச்சிருப்பாங்க போல இருக்கு... வாழ்ந்திட்டுப் போகட்டும்..." அப்பா சொன்னார்.

"அவன் பஸ் ஓட்டுறேன்...

ஓட்டுறேன்னு... பஸ்ஸில் ஏறுறவளப் பார்த்துட்டு அலைஞ்சிருக்கான்... பார்த்ததுதான் பார்த்தான், பைசா உள்ளவளைப் பார்த்திருக்கான்டாம்... ஒண்ணுமத்தத காதலிச்சிருக்கான்... அவளை... என்ன பண்ணுறேன்னு பாருங்க." என்று சொல்லியவாறே கிளம்பியவள், மாமாவுக்காகக் காத்திருந்தாள்.

எனக்கு ஒரே ஆச்சரியம்! சந்தோஷமும் கூட. தமது காதல் கூட்டை அமைத்துக் கொள்ளும் வேளையில் அடித்த புயலில் கூட, என் ஆசையை ஞாபகத்தில் வைத்துக் கொண்டு வாங்கி வைத்திருந்தாரே! அவரது அன்பு என்னை நெகிழ்த்தியது.

மாமா அதன்பின் தமது வேலையில் மாற்றல் வாங்கிக் கொண்டு, வேறு ஊருக்குச் சென்று விட்டார்.

நான் தினமும் அவருக்காக ஆசையாகக் காத்திருக்கிறேன்.



மாமா நிலவரம் அறிந்து, வீட்டுக்கே வரவில்லை. புதுமனைவியோடு வேறு இடத்துக்குப் போய் விட்டார்.

**கா**த்திருந்த அம்மாவும், அப்பாவும் கடைசி வரை மாமா வராததால் ஏமாந்து, மாமாவின் வீட்டில் இருந்த பொருள்களை எடுத்துக் கொண்டு வந்து விட்டார்கள்.

கட்டில், மெத்தை, நாற்காலி, ஸ்டவ் அடுப்பு, மின்விசிறி என்று, வீட்டுக்கு வந்த பொருள்களில் நான் கேட்ட கரடி பொம்மையும் இருந்தது.

**அ**ம்மா வீட்டைப் பெருக்கிக் கொண்டு என் அருகில் வந்தாள். கண்ணாடி அருகே இருந்த பொம்மையை நிமிர்ந்து நோக்கினாள், 'பொம்மையைத் தூக்கி வீசு' என்பது போல. நான் ஆசையுடன் பொம்மையை ஆட்டி விட்டேன். அப்படியும் இப்படியும் ஆடிய பொம்மை, நிமிர்ந்து நின்றது. அசைந்து கொடுக்காத மாமாவின் காதலைப் போல. ○

# நடக்குமென்பார்; நடக்கும்!



**மேஷம்:** பாகிஸ்தான்ல ஒருநாள் தொடரைக் கைப்பற்றிய இந்திய அணி மாதிரி, மனசு மகிழ்ச்சியில துள்ளும். கல்லைத் தொட்டாலும் பொன்னாகிற நேரம். குழப்பம், குடுமிப்பிடி சண்டையெல்லாம் எல்லைதாண்டி போயிரும். உங்கள் தேவைகள் நிறைவேறும். குரு பலம் நிறைந்து இருப்பதால, குடும்பத்துல சுபமங்கள காரியங்கள் நிறைவேற வாய்ப்பிருக்கு. பெண்களுக்கு 'எஸ்க்ட்ரா எனர்ஜி' தர்ற வாரங்கறதால, சந்தோஷத்துக்கு அளவில்லை.



**ரிஷபம்:** பாக். இல் நடந்த இறுதி ஒருநாள் போட்டியில, திடீர்னு வெற்றி கைநழுவிப் போயிடுமோன்னு ரசிகர்கள் தவிச்ச மாதிரி, எதுக்கெடுத்தாலும் மனம் பதறும். பதற்றப்படாதீங்க. தாமதமான காரியங்கள் எல்லாம், இப்ப சட்டுபுட்டுனு முடியும். புதிய முயற்சிக்குப் பலன் உண்டு. எதிர்பார்த்திருந்த இடத்திலிருந்து பணம் வந்து சேரும். மாணவர்களுக்கு படிப்புல கவனம் செலுத்தணும்.



**மிதுனம்:** தான் ஆடிய மூணு ஆட்டத்திலும் சோபிக்காத லட்சுமண், ஃபைனல்ல செஞ்சுரி அடிச்ச மாதிரி, இதுவரை இருந்த மனக்குழப்பங்கள் இப்ப மாறும். மனசுல தெம்பும், தைரியமும் பிறக்கும். வெளிநாட்டுல இருந்து நல்ல செய்தி வந்து சேரும். கலைத் துறையைச் சேர்ந்தவங்களுக்கு முன்னேற்றம் உண்டு. கொடுக்கல் வாங்கல்ல உஷாரா இருங்க.



**கடகம்:** பாகிஸ்தான் மண்ணில் தொடரைக் கைப்பற்றிய கங்குலிக்குப் பயங்கரமா பாராட்டுகள் குவியற மாதிரி, நீங்க செய்த நல்ல காரியத்துக்காக பாராட்டுகள் குவியும். கடன் தொல்லை மாயமாகும். வரவேண்டிய பணம் வந்து சேரும். புதிய வேலை முயற்சியில் வெற்றி உண்டு. கல்யாணம் ஆகாதவங்களுக்கு அதுக்கான வாய்ப்பிருக்கு. மாணவர்கள் முன்னேற்றமடைவாங்க.



**சிம்மம்:** தமக்குக் கொடுத்த வாய்ப்பை அற்புதமா பயன்படுத்திய இந்திய அணியின் பந்துவீச்சாளர் இர்பான் பதான் மாதிரி, உங்களுக்கு இந்த வாரம் கிடைக்கிற வாய்ப்பை நல்லா பயன்படுத்துவீங்க. எல்லோரையும் பேச்சால வசியப்படுத்தி, காரியத்தை ஈசியா முடிக்கறதுக்கு வாய்ப்பிருக்கு. சிலருக்கு இடமாற்றம், பதவி உயர்வு கிடைக்கும். கொடுக்கல் வாங்கல் சுமுகமா இருக்கும். குடும்பத்துல பிரிந்து இருந்தவங்க இப்ப ஒண்ணு சேருவாங்க. இதனால மகிழ்ச்சியும், சந்தோஷமும் ஏற்படும்.



**கன்னி:** இந்திய அணியின் பந்து வீச்சை 'தில்லாலங்கடி' பண்ணின பாக். கேப்டன் இன்ஜமாம் உல் ஹக் மாதிரி, உங்க மேல இருந்த எதிர்ப்புகளை தவிடுபொடியாக்கிடுவீங்க. தடைகள், குறுக்கீடுகள் விலகும். சிலருக்கு எதிர்பாராத பதவி உயர்வு, இடமாற்றம் கிடைக்கும். குடும்பத்துல ஒற்றுமை கூடும். செலவு கட்டுக்கடங்காது. சிக்கனம் அவசியம்.



**துலாம்:** அக்தர் பந்தை வீசறாரா? எறியறாரா'ங்கற குழப்பம் மாதிரி, உங்களுக்குள்ளேயே நிறைய குழப்பம் இருந்துச்சு இல்லையா? அந்தக் குழப்பம் மாறும். எல்லோருடைய ஒத்துழைப்பும், ஆதரவும் தேடி வரும். எதிர்பாராத சந்திப்பு நிகழும். தாமதமாகி வந்த காரியங்கள் தடபுடலா நடக்கும். குடும்பத்தில் அனுகூலமான திருப்பம் நிகழும். வழக்கு விவகாரங்கள்ல நன்மை உண்டு.

**விருச்சிகம்:** முஷாரப் கிரிக்கெட் பார்க்க வந்து வீரர்களை உற்சாகப்படுத்தின மாதிரி, முக்கியமான ஒருத்தரோட அறிமுகம் இந்த வாரம் கிடைக்கும். இந்தச் சந்திப்பால் பலன் உண்டு. புதிய தொழில் முயற்சிகள்ல வெற்றி உண்டு. வர வேண்டிய பணம் வந்து சேரும். கலைத்துறையைச் சேர்ந்தவங்களுக்குப் புகழ், பாராட்டு உண்டு. குடும்பத்தில் நண்பர்கள், உறவினர்கள் வருகை நிகழும். இதனால விருந்து, உல்லாசம்னு மகிழ்ச்சியில திளைப்பீங்க.



**தனுசு:** கடைசி ஒருநாள் ஆட்டத்தில் இன் ஜமாம் பந்தை, சச்சின் சூப்பரா பிடிச்சு, ஆட்டத்தின் போக்கை மாற்றின மாதிரி, குடும்பத்தில் உங்களால் திருப்பம் நிகழ்ந்து, நல்ல காரியம் நடக்க வாய்ப்பிருக்கு. ஹோட்டல், அழகு சாதனம், அலங்காரப் பொருட்கள் ஆகிய துறைகளைச் சேர்ந்தவங்களுக்கு முன்னேற்றம் உண்டு. அலுவலகத்தில் இருந்து வந்த குழப்பங்கள், எதிர்ப்புகள் மறையும். புதிய வேலை முயற்சிகளில் வெற்றி உண்டு.

**மகரம்:** நான்காவது மேட்சில் அக்தர் வீசிய பந்தை, பவுண்டரிக்கும் சிக்ஸருக்குமாக விளாசிய பாலாஜியைத் திட்டிய அக்தருக்கு, சிரிப்பையே பதிலாகத் தந்த பாலாஜி மாதிரி, எல்லோரிடமும் சுமுகமாகப் பேசுங்க. பக்கத்துல சண்டை சச்சரவு நடந்தா, பத்தடி தள்ளிப் போறது நல்லது. முன்னபின்ன தெரியாதவங்ககிட்ட அதிகமா வாய் விட வேண்டாம். வெளிநாட்டிலயிருந்து நல்ல தகவல் வந்து சேரும். பெண்கள் எடுத்த காரியங்களில் வெற்றி பெறுவாங்க.



**கும்பம்:** சரியா ஃபீல்டிங் பண்ணாத தமது அணி வீரர்களை இன்ஜமாம் திட்டிய மாதிரி, ஆத்திரத்தில் எதுவும் யாரிடமும் பேச வேண்டாம். இதனால் பிரச்னைகள் வர வாய்ப்பிருக்கு. புதிய முயற்சிகள் கை கொடுக்கும். எதிர்பார்த்த பண உதவி வந்து சேரும். சிறு சிறு பிரச்னைகள், குழப்பங்கள் வந்து விலகும். குடும்பத்துல குருபலம் நிறைந்திருப்பதால, சுப காரிய முயற்சி, உற்சாகமான மனநிலை நிலவும். பெண்களுக்கு அதிர்ஷ்டமான விஷயங்கள் நடக்கப் போகுது.

**மீனம்:** அக்தர் வீசிய பந்தை வேகமாக அடிக்க முயன்ற பாலாஜியின் பேட் இரண்டு துண்டா உடைந்த மாதிரி, உங்களுக்கு வர்ற எதிர்ப்புகள் தூள் தூளாகச் சிதறும். எல்லோரிடமும் சுமுகமாப் பேசறது நல்லது. எதிர்பார்த்த நல்ல தகவல் தேடி வரும். வெளிநாடு போகும் முயற்சியில் இருப்பவங்களுக்கு வெற்றி உண்டு. செலவுகள் கட்டுக்கடங்காது, சிக்கனம் அவசியம்.



விருச்சிக ராசிக்காரரான சிந்து துலானிக்கு புகழ், பாராட்டு உண்டாமே!

**அக்னி சர்மா பக்கம்**

**மார்ச் 31 முதல் ஏப்ரல் 6 வரை**

ஐயோ - பேட்டா!



# பூக்கார வைகோ!

| | | |
|---|---|---|
| பெயர் | : | இராசு. வடிவேல். வயது 47. |
| தொழில் | : | பூ வியாபாரம். |
| ஊர்: | : | கீழவாசல், ஸ்ரீரங்கம். |
| குடும்பம் | : | மனைவி பானுமதி வடிவேல். இரு மகன்கள். குடும்பமே ம.தி.மு.க. |
| கட்சிப் பற்று | : | சைக்கிளுக்கும் ம.தி.மு.க. வர்ணம். |
| மனைவியின் பாலிஸி | : | ம.தி.மு.க. வர்ணம் பூசப்பட்ட கணவரது சைக்கிளை அக்கம் பக்கத்தார்க்கு இரவல் தருவதில்லை. |
| காரணம் | : | சைக்கிள் இரவல் வாங்குபவர்கள் எங்கு செல்வார்கள் என்று சொல்ல முடியாது. ஒருவேளை, மதுபானக் கடை முன்பாக நிறுத்திவிட்டு 'பாரு'க்குள் அவர்கள் நுழைந்து விட்டால்? என் கணவருக்கும் கெட்டப் பெயர், கட்சிக்கும் கெட்டப் பெயர். |
| கட்சிக்காகச் செய்தது | : | உண்ணாவிரதப் போராட்டம், மறியல் போன்றவற்றில் மனைவியுடன் கலந்து கொள்வது. பொடாவில் வைகோ கைதாகும் முன்பாக, முன்னெச்சரிக்கை நடவடிக்கைக்காகக் கைதாகி ஒரு வாரம் சிறையில் இருந்தது. |
| தியாகம் | : | பொடா சிறைவாசியாக வைகோ கழித்த ஒன்றரை ஆண்டுகளில் வீட்டில் பொங்கல், தீபாவளி போன்ற எந்தப் பண்டிகையும் கொண்டாடாமல் அன்று முழுவதும் கறுப்புச் சட்டை அணிந்து இருந்தது. |
| அல்ப சந்தோஷம் | : | சுற்று வட்டாரப் பெண்கள், "அடியே... வாங்கடி... பூக்கார வைகோ வந்துட்டாருடி" எனச் சத்தமிட்டு, ம.தி.மு.க. வர்ணம் பூசிய தனது சைக்கிளைச் சூழ்ந்து கொள்வது! |

படம்: ஸ்ரீரங்கம் திருநாவுக்கரசு

# சுழி போட்டுக் காப்பாத்துங்க!

ஜனநாயகத் திருவிழா தொடங்கிவிட்டது.

ஐந்தாண்டுகளுக்கு ஒரு முறை தேர்தலை நடத்த வேண்டும் என்பது இந்திய அரசியல் சட்டத்தில் உள்ள விதி "ஐந்தாண்டுகள் அதிகம், நான்காண்டுகளுக்கு ஒருமுறை ஜனாதிபதி பதவிக்குத் தேர்தல்'' என்பது அமெரிக்க அரசியல் சட்டத்தில் உள்ள விதி. "நான்காண்டுகளா? தாங்கவே தாங்காது. மூன்றாண்டுகளுக்கு ஒரு முறை தேர்தல்'' என்பது நியூசிலாந்து நாட்டில் உள்ள சட்டம். "ஒரு நாடாளுமன்ற உறுப்பினர் மூன்றாண்டுகளுக்கு இருப்பதா? இரண்டாண்டுகள் போதும்'' என்பது அமெரிக்காவின் மக்களவைத் தேர்தலில் உள்ள விதி.

நல்லவேளை, எந்த நாட்டிலும் ஆண்டுக்கு ஒருமுறை தேர்தல் என்ற சட்டம் கிடையாது!

ஓர் ஆட்சி நடந்து கொண்டிருக்கும் ஐந்தாண்டுகளில், ஊழலைப் பற்றிப் பேசப்படுகிறது. தேர்தல் நடக்கும்போது அரசியல் கட்சிகளின் மேடைகளில் ஊழல் பற்றிப் பேசப்படுகிறது. ஆனால் எந்த அரசியல் கட்சியும் பணநாயகத்தைப் பற்றிப் பேசுவதில்லை.

பணநாயகத்தின் தீய விளைவுகளைப் பற்றிச் சிந்திக்க வேண்டும்.

ஒரு காலத்தில் ராஜ்ய சபையில் மூத்த அரசியல் தலைவர்கள், நிபுணர்கள், அறிஞர்கள் என்று பலர் இருந்தார்கள். அவர்களுக்குப் போட்டி அரசியலில் ஆர்வம் குறைவு. ஆனால் நாட்டுப் பற்று அதிகம்.

ஆனால், இன்றோ ராஜ்ய சபையைப் பற்றிய அணுகுமுறையே வேறு. மிகப் பெரிய பணக்காரர்கள் அதில் இடம் பெறத் துடிக்கிறார்கள். பல கோடி ரூபாய்களைச் செலவழிக்கவும் அவர்கள் தயாராக இருக்கிறார்கள்.

லோக் சபைத் தேர்தலில் உடல் உழைப்பு, அலைச்சல், வெயில், மழை,



ப.சிதம்பரம்

புழுதி, தூசி, தொண்டை வறண்டு போகும் அளவுக்குப் பேச்சு, உடல் நலக் குறைவு, மக்கள் கேட்கும் கேள்விகளுக்குப் பதில் சொல்ல வேண்டிய கடமை, என்று பல சங்கடங்கள். இவற்றுக்கெல்லாம் அப்பால் வெற்றியா, தோல்வியா என்பது கேள்விக்குறி.

ராஜ்ய சபைத் தேர்தலில் நிழல், சுகம், ஏறத்தாழ நிச்சயமாக வெற்றி என்ற நிலை.

ராஜ்ய சபைக்குள் நுழைவதற்கு வாய்ப்பிருந்தால், ஏன் லோக் சபைக்கு ஆசைப்பட வேண்டும்?

லோக்சபைத் தேர்தலில் பணம் விளையாடுவதால் பல தீய விளைவுகள் ஏற்படுகின்றன.

முதல் விளைவு, எல்லா அரசியல் கட்சிகளும் நிறையப் பணம் திரட்ட வேண்டியிருக்கிறது. நேர் வழியிலும் நிதி வசூலிக்கிறார்கள். தவறான வழிகளிலும் பணத்தைக் குவிக்கிறார்கள்.

பெரும்பான்மையான தொகுதிகளில் பணம் உள்ளவர்களே வேட்பாளர்களாக நிறுத்தப்படுகிறார்கள். "உங்களால் 25 லட்சம் ரூபாய் செலவழிக்க முடியுமா?" என்று பகிரங்கமாகவே நேர்காணல்களில் கேட்கப்படுகிறது. "நான் 50 லட்சம் ரூபாய் செலவழிக்கிறேன்" என்று பெருமையோடு பதிலும் வருகிறது.

சாதாரண, எளிய கட்சித் தொண்டர்களுக்குத் தேர்தல் என்பது எட்டாக் கனியாகிவிடுகிறது.

ஒவ்வொரு தொகுதியிலும் ஐம்பது லட்சம், ஒரு கோடி என்று பணம் செலவாகும்போது, அந்தப் பணம் எந்தக் காரியங்களுக்காகச் செலவாகிறது?

சில தொகுதிகளில் வோட்டுக்குப் பணம் தரப்படுகிறது. அது வோட்டுக்குத் தரப்படும் விலை. அது லஞ்சம்தானே?

ஊரில் கோயிலைக் கட்டுவதற்கு அல்லது புனரமைப்புச் செய்வதற்கு, இரண்டு லட்ச ரூபாய் தரப்படுகிறது. ஒரு வகையில் அது ஊருக்குத் தரப்படும் லஞ்சம்.

எளிய மக்கள் வாழும் பகுதிகளில், "என்னிடம் நூறு வோட்டுகள் இருக்கின்றன. எனக்கு ஆயிரம் ரூபாய் தாருங்கள்" என்று பேரம் பேசும் தரகர்கள் முளைக்கிறார்கள்.

## இது அந்த அருள்தானா?

ஒவ்வொரு ஊராகப் போய், அந்த ஊரில் நிலவும் சமகாலப் பிரச்னைகளின் பின்னணியில் படமெடுப்பதில் கெட்டிக்காரர் இயக்குனர் ஹரி. இந்த முறை கோவையில் முகாமிட்டிருக்கிறார். எல்லாம் 'அருள்' படத்துக்காக. விக்ரம் பஞ்சாலைத் தொழிலாளியாக

தேர்தலில் செலவழிக்கப்படும் பணம் ஒரு முதலீடு, என்று வெற்றி பெற்ற வேட்பாளர் நினைக்கத் தொடங்கினால், அதனுடைய விளைவுகளையும் எண்ணிப் பார்க்க வேண்டும். "போட்ட முதலை எப்படி எடுப்பது" என்ற எண்ணம் எழும் என்பதே உண்மை. நாடாளுமன்ற உறுப்பினருக்கும், சட்டமன்ற உறுப்பினருக்கும் தொகுதி வளர்ச்சிக்காக ஒதுக்கப்படும் நிதியிலிருந்து (முறையே ரூ. 2 கோடி, ரூ. 82 லட்சம்) ஏதாவது எடுத்துக் கொள்ள முடியாதா என்ற சபலம் ஏற்படும். தம்முடைய தொகுதியில் நடைபெறும் வேலைகளில் (குறிப்பாகச் சாலைப் பணிகள், கட்டடப் பணிகள்) தனக்கு ஏதாவது ஆதாயம் கிடைக்காதா என்ற சபலம் ஏற்படும். பிறகு சிபாரிசுகள், பரிந்துரைகள் -- அவற்றைச் செய்வதற்குச் சன்மானம் - என்று பணத்தை ஈட்டுவதே முழு நேரப் பணியாக அமைந்துவிடும்.

உங்களைச் சுற்றிப் பாருங்கள்.

உங்கள் பகுதியில் கடந்த பத்து, பதினைந்து ஆண்டுகளில் இருந்த எம்.பி, எம்.எல்.ஏ அமைச்சர்களின் வாழ்க்கையை ஆராய்ந்து பாருங்கள். வெறும் நூறு ரூபாய் புரட்ட முடியாதவர்கள் எல்லாம், எப்படி மாடி வீடு கட்டி, வண்டி வாகனம் வாங்கி, இலட்சாதிபதிகளாக மாறிவிட்டார்கள் என்று பாருங்கள். நேர்மையானவர்களே இல்லை என்று நான் சொல்லவில்லை. ஆனால் அப்படிப்பட்டவர்கள் அபூர்வமாக இருக்கிறார்கள் என்பதே என்னுடைய கவலை.

நடிக்கிறார். சாயப்பட்டறைகளால் நிலத்தடி நீர் மாசுபட்டு, மக்கள் குடிநீருக்கு அலைவதைக் கண்டு வெகுண்டு எழும் கோபக்கார இளைஞர் வேஷமாம். 'ஸ்டில்'லைப் பார்த்தால் வேறு அருள் வந்தவர் மாதிரியல்லவா இருக்கு?

- ஸ்ரீ



• விக்ரம் - ஜோதிகா

தேர்ந்தெடுக்கப்பட்ட உறுப்பினர்களுக்குப் பணம் ஈட்டுவது முக்கிய நோக்கம். அதேநேரத்தில் குற்றவாளிகள் அரசியலில் நுழைகிறார்கள். அரசியல்வாதிகளுக்கும் குற்றவாளிகளுக்கும் நெருக்கம் ஏற்படுகிறது. அரசியல்வாதிகளின் பலவீனத்தைக் குற்றவாளி உணர்ந்து கொள்கிறான். அதன் விளைவுதான், முத்திரைத்தாள் ஊழல். குஜராத்தில் கூட்டுறவுச் சங்கங்களில் நடைபெற்ற பல்லாயிரம் கோடி ரூபாய் ஊழல், ஆற்று மணல் அள்ளுவதில் ஊழல், கிரானைட் குவாரிகளில் ஊழல், என்று குற்றவாளியும் அரசியல்வாதியும் கை கோத்துக் கொண்டு காரியங்கள் செய்வதைப் பார்க்கிறோம்.

இவற்றுக்கெல்லாம் ஒரு தேர்தலில் முற்றுப்புள்ளி வைக்க முடியாது. ஆனால் எதிர்வரும் தேர்தலில், ஒரு பிள்ளையார் சுழியாவது போடலாமே.

ஒரு தொகுதியில் எந்த வேட்பாளர் பணத்தை வாரி இறைக்கிறார் என்பதைத் தெரிந்து கொள்வதற்கு, ஒரு துப்பறியும் சாம்பு தேவையில்லை. நம்மைச் சுற்றி நடக்கும் நிகழ்ச்சிகளைப் பார்த்தாலே போதும். அந்த வேட்பாளரைப் பற்றி ஊரே பேசுவதைக் கேட்டால் போதும். அவருடைய சார்பில் நடைபெறும் பிரசாரத்தில் பரிமளிக்கும் 'செழிப்பு' கண்கூடாகத் தெரியும்.

அந்தத் தொகுதி வாக்காளர்களைக் கேட்டுக் கொள்கிறேன். தயவு செய்து அந்த வேட்பாளரை - அவர் எந்தக் கட்சியைச் சார்ந்தவராக இருந்தாலும் தோற்கடியுங்கள். அவருடைய பண பலமே அவருக்கு எதிராகப் பாயட்டும். தமிழகத்தில் மிக அதிகமாக பணத்தைச் செலவழித்த நான்கு வேட்பாளர்கள் தோற்றார்கள் என்ற செய்தி வெளியானால், அதுவே தமிழக அரசியல் வரலாற்றில் மிக முக்கியத் திருப்புமுனையாக அமைந்துவிடும்.

அடுத்த தேர்தலுக்குள், முக்கியச் சீர்திருத்தங்களைக் கொண்டு வர வேண்டும். அதில் முதல் சீர்திருத்தம், வேட்பாளரின் தேர்தல் செலவுகளில் ஒரு பகுதியை, அதாவது சில காரியங்களையாவது - அரசே ஏற்றுக் கொண்டு, அந்தத் தேர்தல்களில் வேட்பாளர் யாரும் அந்தச் செலவுகளைச் செய்யக் கூடாது என்று சட்டம் இயற்றலாம். உதாரணமாக, போஸ்டர் செலவுகள், கார் செலவுகள் என்ற செலவுகளுக்கு, ஒவ்வொரு வேட்பாளருக்கும் ஒரு தொகையை அளித்து விட்டு, ஒரு தொகுதியில் வேறு போஸ்டர்களை யாரும் ஒட்டக் கூடாது, வேறு எந்தக் காரும் தேர்தல் பிரசாரத்திற்குப் பயன்படுத்தக் கூடாது என்று விதி இயற்றலாம். பல நாடுகளில் அரசியல் கட்சிகளின் அதிகாரபூர்வமான வேட்பாளர்களுக்கு அரசே தேர்தல் செலவுக்காக ஒரு தொகையைக் கொடுக்கிறது.

ஜனநாயகத்தைக் காப்பாற்ற வேண்டுமென்றால், பணநாயகத்தைத் தோற்கடிக்க வேண்டும். அதை எதிர்வரும் தேர்தலிலிருந்தே தொடங்கலாமே?

(தொடரும்)

புதுடெல்லி, பிரதமர் ஜாகை, வாசல் புறம் புல்தரை, காமிரா கலைஞர்களுக்காக வாஜ்பாயி போஸ் கொடுத்துக் கொண்டிருந்தார். "கொஞ்சம் சிரிங்க... கொஞ்சம் முன்னால வாங்களா?... கொஞ்சம் ஸைடுல பாருங்க..." என்று கோரிக்கைகளுக்கு இடையே, "ரொம்பக் குழப்பாமல் கொஞ்சமா குழப்பினால் நல்லது" என்று குரல் கேட்டுக் கோபத்துடன் திரும்பினார் வாஜ்பாயி. அவர் மூட் அவுட் ஆகவும், காமிராக்காரர்கள் கலைய ஆரம்பித்தனர். "உனக்கு எந்த இடத்தில் என்ன பேசறதுன்னே தெரியாது!" என்று என் காதைப் பிடித்துத் திருகினார்.

'ஸ்... ஆ!... ஊ!...' என்று சத்தம் போட்டு அவரிடமிருந்து விடுவித்துக் கொண்டு, "நான் பள்ளி மாணவனாக இருந்தபோது என்னை அல்ஜீப்ராதான் ரொம்பக் குழப்பும். அதைவிட பயங்கரமா நீங்க குழப்பறீங்க" என்றேன்.

"குழப்பாதே! விஷயத்தைத் தெளிவாகச் சொல்லு" என்றார்.

"குழப்பத்தைத் தவிர்க்கவே மறுபடி தேர்தலில் நின்று பிரதமராக வர முயற்சி செய்வதாகச் சொன்னீங்க... ரிடையர் ஆகணும்னுதான் ஆசைன்னு பேசினீங்க..."

"ஆமா, அதுக்கென்ன...?"

"நீங்க இல்லாம பி.ஜே.பி. ஆட்சிக்கு வந்தா, குழப்பம்தான் நிலவும்னு நீங்களே சொல்ற மாதிரி ஆகுதே! அப்ப இதர பி.ஜே.பி. தலைவர்களை நம்ப முடியாதுன்னு ஏற்படுதே!"

"சேச்சே! அப்படியில்லை அர்த்தம். காங்கிரஸ் கூட்டணி ஆட்சிக்கு வந்துட்டா, நாட்டில் குழப்பம்தான் நிலவும் என்ற அர்த்தத்தில் சொல்லியிருப்பேன்."

"அப்படி வைச்சுக்கிட்டா, நீங்க ஓய்வு பெற்றால் பி.ஜே.பி. தோற்றுப் போயிடும்; காங்கிரஸின் வெற்றி உறுதின்னு நீங்களே ஒப்புக் கொள்கிற மாதிரி ஆயிடுமே..."

"என்னப்பா குழப்பறே $(a+b)^2$ = என்ன? தெரியுமா?" என்று ஆரம்பித்தார் வாஜ்பாயி. அப்புறம் நான் ஏன் அங்கு நிற்கிறேன்? பஞ்சாப்பை நோக்கி பஞ்சாய்ப் பறந்தேன்!

●●●

அத்வானி பஞ்சாப் மாநில எல்லைக்குள் நுழையும் தருணத்தில், அவர் எதிரே இருந்தேன்.

"உங்க தனிப் பெரும் தலைவர்தான் குழப்பறார்னா நீங்க வேற..."

"என்ன குழப்பிட்டேன்?"

"வடமதுரையில் பேசும்போது 'ராமர் கோயில் கட்டப்படும்; ராமராஜ்யம் வந்தே தீரும்'னு அடிச்சுப் பேசறீங்க; அடுத்து முஸ்லிம்கள் அதிகமான அலிகார்ல பேசும்போது "எந்த விதமான கசப்பு உணர்வுக்கும் இடம் தரமாட்டோம்; சமரசமான பேச்சு வார்த்தைக்குப் பிறகே ராமர் கோயில் கட்டப்படும்"னு சொல்றீங்க... இரண்டு மணி நேரத்துக்குள் இரண்டு விதமாகப் பேசினா குழப்பமா இராதா? உங்க பரிவாரத்தைச் சேர்ந்த கிரிராஜ் கிஷோர், "வாஜ்பாயி, முஸ்லிம் பிரமுகர்களை பி.ஜே.பி. மேடையில் ஏற்றி காக்கா பிடிக்கிறார்" என்று வெளிப்படையா குற்றம் சாட்டுறார்... எல்லாருமா சேர்ந்து ஜனங்களை ஏப்ரல் முட்டாளாக ஆக்கறீங்க..."

"இந்த விஷயத்துல குழப்பறதுதான் நோக்கமே! அதுதான் எங்க ராஜ தந்திரம்" என்று அத்வானி கூறி முடிக்கு முன்னர், அவர் ரதம் ஜலந்தரை நெருங்கவும், "அத்வானி, திரும்பிப்போ!" என்று

## செய்திகள்,

ஆயிரக்கணக்கான கண்டங்களிலிருந்து கோஷம் எழ, மறியல் தொடங்க, ரதத்தின் மேலே ஏறிப்போய் பார்த்தால், திரும்பின பக்கமெல்லாம் கறுப்புக் கொடி!

"உங்க ராஜதந்திரத்தின் பலனைப் பார்த்தீங்களா? இன்னிக்கு முஸ்லிம்கள், கிறிஸ்துவர்களுக்குத் தொல்லை தரும் உங்க பரிவாரம், நாளை சீக்கியர், பௌத்தர் முதலியவர்களுக்கு எதிராகவும் திரும்பலாம் என்று பயப்படுறாங்க!"

"அட, போப்பா! முதல் பந்தை வீசுவதற்கு முன்பே நாங்க மாட்சை ஜெயிச்சாச்சு" என்று தேர்தல் முடிவு குறித்து ஓர் ஆங்கில வழக்கு மொழியைக் கையாண்டார் அத்வானி.

"ஜாக்கிரதையா பேசுங்க. இப்பல்லாம் மாட்ச் ஃபிக்ஸிங் பற்றி நிறைய

"எனக்கு மக்களைச் சந்திக்கவே நேரம் போதவில்லை. மற்ற விஷயங்களில் பொறுப்பை வேறு ஒருவர் தலையில் சுமத்தினால் சொதப்பிடறாங்க... தமிழ்நாடு சமாசாரம் பாரு... ஒரே குழப்பம்..." என்று நெற்றியை விரல்களால் அழுந்தப் பிடித்துக் கொண்டார்.

"அட்வைஸ் தேவைன்னா எனக்கு சொல்லி அனுப்புங்க, நோ சார்ஜ்! சர்வீஸ் டாக்ஸ் கூடக் கிடையாது" என்று கூறி விட்டு, மத்திய, விமானப் போக்குவரத்து அமைச்சகம் வாரிவிடுகிற ஏராளமான ஓசி டிக்கெட்டுகளில் ஒன்றை சிபாரிசு பிடித்து பெற்றுக் கொண்டு, ஏர் இந்தியா ஃப்ளைட்டில் சென்னைக்கு வந்தேன்.

●●●

**மீ**னம்பாக்கத்திலிருந்து நேரே கோபாலபுரம். "என்னங்க கையெழுத்து உங்களுடையதா இல்லையா?"

"நான் ஒண்ணும் என் கையெழுத்தை 'என் கையெழுத்தே இல்லை'ன்னு சொல்ற ரகம் இல்லை!"

"அப்ப ஏன் கையெழுத்துப் போட்டீங்க...?"



# திரிப்பது செம்பியன்

குற்றச்சாட்டுகள் அடிபடுது" என்று கூறி விட்டு, ஃப்ளைட் பிடித்து டில்லிக்கு வந்து சேர்ந்தேன்.

●●●

**"சோ**னியாஜி! உங்க பங்குக்கு நீங்களும் ரொம்பத்தான் குழப்பறீங்க... மாயாவதிக்கு டீ பார்ட்டி கொடுத்து அனுப்பிட்டீங்க; முலாயம் சிங் யாதவ் அரசுக்கு சட்டமன்றத்தில் ஆதரவு கொடுக்கறீங்க. ஆனா அவரோடு கூட்டணி அமைக்கத் தயங்கறீங்க. இப்ப அவர் மாயாவதிக்குப் போட்டியா தமது வேட்பாளர்கள் பட்டியலை அறிவிச்சதும் கோவிச்சுக்கிட்டு, சட்டமன்றத்தில் ஆதரவு வாபஸ் ஆயிடும்னு மிரட்டறீங்க..."

"நான் என்ன சோனியா பிரதமரா வரக் கூடாதுன்னா போட்டேன்? அயல்நாட்டில் பிறந்தவர் இங்கு வந்து நாடாளுமன்றம் மூலமோ, சட்டமன்றம் மூலமோ ஓர் உயர் பதவியைப் பிடித்து, அதில் அமரக் கூடாதுன்னு ஏதோ பொதுப்படையா எழுதிக் கொடுத்தாங்க, அதனால கையெழுத்துப் போட்டேன்..."

"ரெண்டும் ஒண்ணுதானே?"

"அதெப்படி ஒண்ணாகும்? உதாரணமா a வந்து ராஜீவ், b வந்து சோனியான்னு $(a+b)^2 = a^2 + 2ab + b^2$ன்னு வைச்சுக்கிட்டா, அதாவது, ராகுலும் பிரியங்காவும் 2ab ன்னு வைச்சுக்கிட்டா..."

"போதும் போதும்!" என்று எடுத்தேன் ஓட்டம்! எனக்கு குழப்பம் தீர ஒருவாரமாவது ஆகும். உங்களுக்கு...?

பெண்ணாகரம் - ஒகேனக்கல் போகும் வழியில் உள்ள சிற்றூர். தருமபுரி பாராளுமன்றத் தொகுதியைச் சேர்ந்தது. கயிற்றுக் கட்டிலில் படுத்துக் கொண்டு உத்தரத்தைப் பார்த்துக் கொண்டிருந்தார் முருகேசன். "மாறிட்டாங்க ஸார் அந்தம்மா. விவசாயிகளுக்கு என்ன செய்தது? பாருங்க.. தேர்தலுக்கு அப்புறம் இலவச மின்சாரம் கிடையாதுன்னு சொல்லிடு வாங்க. இந்த அம்மா வந்தா மழை பெய் யும்னு சொன்னாங்க. அதுவும் பொய்த் துப் போச்சு!" அடிக்கும் வெய்யிலை விடச் சூடாக இருந்தது அவ

# தாமரைக்குத் தள்ளாட்டம்?

ரது பேச்சு. அதியமான் கோட்டை 'ராமசாமி' "இங்கு பொழைக்கவே வழியில்லீங்க... குடும்பம், குடும்பமா பெங்களூருக்குப் போயி கட்டட வேலை செய்யறாங்க. ஒரு காலத்துலே எம்.ஜி.ஆர். மேல் மிகவும் பிடிப்புள்ள பகுதிங்க. இப்போ ரெட்டலை என்றாலே வெறுப்பா இருக்குதுங்க" என்கிறார். தருமபுரி நெல்லி நகரில் நாம் சந்தித்த அமுதா, "ஐந்து வருடங்களில் கலைஞர் எவ்வளவோ செய்தார். அதனால் கலைஞர் கைகாட்டும் மாம்பழத்துக்குத்தான் வோட்டு" என்று வெளிப்படையாகச் சொல்ல, குடும்பப் பெண்மணியான லதா, "போல்டான லேடி ஜெயலலிதா, எனக்கு ரொம்பப் பிடிக்கும்" என்கிறார்.



• பு.தா.இளங்கோவன்



• முல்லைவேந்தன்



• ராமதாஸ்

• டாக்டர் செந்தில்

தருமபுரி தொகுதி வித்தியாசமான மோதலைச் சந்தித்துக் கொண்டிருக்கிறது. நேற்றுவரை டாக்டர் ராமதாஸைச் சுற்றிக் கொண்டிருந்த பு.தா.இளங்கோவன், ஒரே தாவில் ரகசியமாக பா.ஜ.க.வுக்குச் சென்று, அதன் வேட்பாளராகிவிட்டார். பா.ம.க. சார்பில் நிற்பவர் டாக்டர் செந்தில்.

தருமபுரி பாராளுமன்றத் தொகுதியில் ஆறு சட்டமன்றத் தொகுதிகள். இவற்றில் மேட்டூரும், தாரமங்கலமும் சேலம் மாவட்டத்தில் இருக்கின்றன. தர்மபுரி, மொரப்பூர், பெண்ணாகரம், அரூர் ஆகியவை தர்மபுரி மாவட்டத்தில் இருக்கின்றன. கிட்டத்தட்ட பதின்மூன்று லட்சம் வாக்காளர்கள். வன்னியர்கள்தான் அதிகம்.

"இந்த முறை பு.தா.இளங்கோவன்

மூன்று லட்சம் வாக்கு வித்தியாசத்தில் தோற்றுப் போவார்" என்கிறார் மாவட்ட பா.ம.க. பிரமுகரான பாடி செல்வம். "இவரால் கட்சிக்குத் தான் டேமேஜ். தொகுதிக்கு வருவதே கிடையாது. தேர்தல் நிதி என்று பணம் பறிக்கும் வேலை வேறு. பல கிராமங்களில் இவர் வாக்குக் கேட்கக் கூட நுழைய முடியாது" என்கிறார் அவர்.



• லதா



• அமுதா





• ராமசாமி

• செந்தில் குமார்



• முருகேசன்

**தர்மபுரி தகராறுகள்!**

**செ**யல்வீரர்கள் கூட்டங்களில் கலந்து கொள்ள வந்திருந்த டாக்டர் ராமதாஸைச் சந்தித்தோம். "வாக்குக் கேக்கறதைவிட, இந்தத் தொகுதி மக்களிடம் மன்னிப்புக் கேட்பதுதான் முக்கியம் என்று கருதுகிறேன். 'மாற்றுத் துணி கூட வாங்க சக்தியில்லாமல் இருந்த இளங்கோவன், இன்று எப்படி கோடீஸ்வரர் ஆனார்?' என்று கட்சிக்காரர்கள் கேட்கிறார்கள்" என்றார் ராமதாஸ்.

திமு.க. கூட்டணியின் வேலை சுறுசுறுப்பாகத் துவங்கியிருக்கிறது. முன்னாள் தி.மு.க. அமைச்சர் முல்லைவேந்தன் தலைமையில், தேர்தல் வேலைகள் முடுக்கிவிடப்பட்டிருக்கின்றன. தேர்தல் நாளன்று ஆளுங்கட்சியின் அதிகார, பண, ஆள் பலத்தைச் சமாளிக்க, முல்லை வேந்தன்தான் சரியான ஆள் என்கிறார்கள்.

"**நா**ன் கோடிக்கணக்கில் சொத்து சேர்த்து விட்டதாக உளறுகிறார்கள். டாக்டர் சொல்வதை நிரூபித்தால், என் சொத்துகளை வன்னியர் சங்கத்திற்குக் கொடுத்து விடுகிறேன். அதே சமயம் அவர் குவித்துள்ள சொத்துகளையும் கணக்குப் பார்க்கலாமா?" என்று கேட்கிறார் பு.தா. இளங்கோவன். "பின் தங்கிய தொகுதி. தொழில் வளத்திற்கு வாய்ப்பில்லை. என்னால் முடிந்த அளவுக்கு தொகுதி நிதியைக் கொண்டு நலப் பணிகளைச் செய்ததுடன், ஆயிரக் கணக்கானவர்களுக்கு மருத்துவ நிதி உதவியும் வாங்கிக் கொடுத்துள்ளேன்" என்கிறார். தேர்தல் நெருங்க நெருங்க, தேசிய மாநிலப் பிரச்னைகளை விட தனிநபர் மோதல், அவதூறுகளை வீசுதல் என்று தான் பிரசாரம் அமையும் போலிருக்கிறது.

"தொழிற்சாலை வளாகம் அமைத்து வேலை வாய்ப்பை உருவாக்குவேன். அதே போல் ஒகேனக்கல் கூட்டு குடிநீர் திட்டத்தை எப்படியும் செயல்படுத்த முயற்சி செய்வேன்" என்கிறார் பா.ம.க. வேட்பாளரான டாக்டர் செந்தில்.

**பா**.ம.க.வைத் தோற்கடிக்க வேண்டும் என்று ரஜினி ரசிகர்கள் விரசபதம் எடுத்துள்ளனர் அல்லவா! "மாவட்டத்தில் எழுநூற்றியைம்பதுக்கும் மேற்பட்ட மன்றங்கள் இருக்கின்றன. பா.ம.க.வைத் தோற்கடிப்பது என்பதுதான் எங்கள் குறிக்கோள். தனிப்பட்ட முறையில் பிரசாரம் செய்வதா, கூட்டணி மேடைகளில் பிரசாரம் செய்வதா என்பதை இனிதான் முடிவு செய்வோம்" என்று சொல்கிறார், மாவட்ட ரஜினி ரசிகர் மன்றத் தலைவரான செந்தில் குமார்.

- ப்ரியன்

படங்கள் : மீடியா ராமு

"பைபிள் ஒரு கிறிஸ்தவனை அல்ல! குர்ஆன் ஒரு முஸ்லீமை அல்ல! கீதை ஓர் இந்துவை அல்ல! மூன்றும் சேர்ந்து ஒரு மனிதனை உருவாக்க வேண்டும். ஆனால் எங்கே கோளாறு?

அரைகுறை ஞானம் அடிதடியில் அல்லவா முடிகிறது?

மனிதனுக்குப் பிரச்னையே ஈகோதான். இந்த ஆணவ உணர்ச்சிதான், அகில உலகத்தில் இருக்கிற அத்தனை பிரச்னைகளுக்கும் அடிப்படை. இதைப் போக்க என்ன செய்ய







• பா. பிருந்தா



# உன் மதமா? என் மதமா?

• கு. டேவிட்ராஜ்

வேண்டும் என்பதைத்தான், எல்லா மதங்களும் சொல்லித் தருகின்றன.

சிவ பெருமான் சின் முத்திரையைக் காட்டுகிறார். ஆன்மாவாகிய நீ, அகந்தையை அகற்றினால் என்னை அடையலாம், என்பது இந்த முத்திரையின் அர்த்தம். தீப்பெட்டியும் தீக்குச்சியும் பேசிக் கொண்டன. தீக்குச்சி கேட்டது "இருவரும்தானே உரசிக் கொள்கிறோம், நான் மட்டும் தீப்பற்றிக் கொள்கிறேனே எப்படி?" தீப்பெட்டி சொன்னது, "உனக்கு மண்டைக் கனம் அதிகம்! பாதுகாத்தவனையே உரசினால் அழிவுதான்" இது தீக்குச்சிக்குப் புரிகிறதோ இல்லையோ, மனிதர்கள் புரிந்து கொண்டால் மதவெறி இல்லை.

இயேசுபிரான் மரித்த சிலுவையை எடுத்துக்

ஏட்டிக்குப் போட்டி கல்கி



ஓர் அஞ்சல்காரர் இருந்தார். அவர் ஓர் இஸ்லாமியர். வேலைப் பளு காரணமாகக் கடிதங்களை வீடுகளின் ஜன்னல்கள் வழியே வீசிவிட்டுப் போவது அவர் வழக்கம். ஒருநாள் ஒரு வீட்டின் ஜன்னலைத் தட்டினார். வீட்டுக்காரர் வியந்து "எப்போதும் கடிதங்களை வீசிவிட்டுச் செல்வீர்களே?" என்று கேட்க, "சாதாரணக் கடிதம் என்றால் அப்படிச் செய்

• ச. சத்தியராஜ்







• விஜயலட்சுமி

• பா. நித்யா



• திருமேனி அழகர்

கொள்ளுங்கள். அதன் செங்குத்து மரம் I எனும் ஆங்கில எழுத்தின் வடிவத்தைப் பிரதிபலிக்கிறது. அந்த நான் என்ற அகந்தையை அகற்றிடும் அடித்தல் குறியாக, குறுக்கே ஒரு மரம். இதனால்தான் தம் மரணத்திற்குக் காரணமானவர்களை "பிதாவே, இவர்கள் செய்யும் காரியம் என்ன என்பதை அறியாமல் செய்கிறார்கள். எனவே இவர்களை மன்னியும்" என்றார்.

நபிகள் நாயகமோ, தினசரி தாம் செல்லும் வழியில் தம் தலை மீது குப்பைகள் கொட்டும் ஒரு பெண்மணியை, ஒரு நாள் காணாமல் பதறினார். அவளுக்குக் காய்ச்சல் என்று அறிந்து, அவரைப் போய்ப் பார்த்த நபிகள்... 'இன்று என் மீது குப்பைகள் கொட்டி சந்தோஷப்பட இயலாமல் போய்விட்டதே' என்று வருந்தினார். அவள் விரைவில் குணம் பெற்று வர வேண்டும் என்று ஆசி தந்தார். மனிதர்களாகிய நம்மால் இப்படி நடக்க முடியாதா? முடியும்.

# வழங்கும் கல்லூரிப் பட்டிமன்றம்

திருக்கலாம். இது திருப்பதி கோவிலில் இருந்து உங்களுக்கு வந்திருக்கும் பிரசாதம்!'' என்று பதிலுரைத்து, அவர் கரங்களில் தந்தார். ஆன்மிகத்தைவிட எந்த சாதனம் நமக்குப் பக்குவம் தந்துவிடும்? அரசியல் தருமா? சினிமா தருமா? இல்லை இலக்கியம் தருமா? மதங்கள்தான் தர முடியும். மதங்கள் இங்கே சரியாகத்தான் இருக்கின்றன. மனிதர்கள்தான் மதங்களைக் கெடுக்கிறார்கள்."



• ஆர்.எஸ்.கே. ரகுராமன், சீதா ரவி, கே. தியாகராஜா, ஜெயச்சந்திரன்.

இப்படி அதிரடியாக ஒரு தீர்ப்பை வழங்கினார், மதுரை வானொலியின் இயக்குனர், ஆன்மிக அறிஞர், இளசை சுந்தரம். திண்டுக்கல் பி.எஸ்.என்.ஏ பொறியியல் மற்றும் தொழில் நுட்பக் கல்லூரியில், கல்கி நடத்திய ஏட்டிக்குப் போட்டி பட்டிமன்றத்தில்தான், எல்லா மதங்களையும் ஒப்பிட்டு, மாணவர்களை நெகிழ வைத்தார், இந்த நகைச்சுவைச் சித்தர்.

கல்லூரியின் இயக்குனர் ஆர்.எஸ்.கே ரகுராமன் தலைமை வகிக்க, முதல்வர் கு. தியாகராஜா அனைவரையும் வரவேற்க, கல்கி ஆசிரியர் சீதா ரவி அறிமுகவுரை நிகழ்த்த, பொற்கிழிப் புலவர் இளசை சுந்தரத்தின் நடுவாண்மையில், பொறியியல் பயிலும் ஆறு மாணவ, மாணவிகள் பட்டையைக் கிளப்பினார்கள் பட்டிமன்றத்தில்!

மதம் மனிதர்களைக் கெடுக்கிறது என்ற அணிக்கு வலு சேர்க்க, முதலில் வந்தார், இரண்டாமாண்டு மாணவரான கு. டேவிட்ராஜ். இந்தியாவில் கோவில்களிலும், மடங்களிலும் குவிந்து கிடக்கும் சொத்துகளில் பத்தில் ஒரு பங்கை விற்றாலே, நமது வெளிநாட்டுக் கடனை அடைத்துவிடலாம். மதத்தின் பெயரால் எதற்கு இத்தனைச் சொத்துகள் கிணற்றில் போட்ட கல்லாக கிடக்கிறது? மதங்கள் எல்லாம் ஒரே வழியைத்தான் காட்டுகின்றன என்றால், எல்லா மதங்களும் இணைய இங்கே என்ன தடையாக இருக்கிறது?'' என்று எடுத்ததுமே தாக்குதலை நச்சென்று தொடங்கினார்.

இவருக்குப் பதிலடி கொடுக்க வந்தார், 'மனிதன்தான் மதத்தைக் கெடுக்கிறான்' என்ற அணியின் வாதத்திற்கு பிள்ளையார் சுழி போட்ட முதலாண்டு மாணவி நித்யா.

"கோவில், மடங்களின் சொத்துகள் இந்த சமுதாயத்தை வளர்க்கத்தான் பயன்பட்டிருக்கின்றன. பழனி மலை கோவிலுக்கு வருகிற வருமானத்தைக் கொண்டு, அதன் அடிவாரத்திலே பள்ளிகளும், கல்லூரிகளும், மருத்துவமனைகளும் இயங்குகின்றன. ஏழைகள் படிக்கிறார்கள். எளியவர்கள் பயன்பெறுகிறார்கள் என்பது எதிரணிக்குத் தெரியவில்லை.

பணம் கொடுக்கிறவனுக்கு பத்தடியில் தரிசனம். எதுவும் தர முடியாதவனுக்கு நூறடியில் தர்ம தரிசனம். இந்த இடைவெளியைக் கொண்டு வந்தது இடையில் வந்த மனிதர்கள்தானே தவிர, எங்கும் நிறைந்திருக்கும் இறைவன் அல்ல'' என்றார்.

அடுத்து வந்தவர் முதலாண்டு மாணவி பிருந்தா. "ஒரு சிவில் என்ஜினியரை உலகமே தேடிக்கிட்டு இருக்கு. அவர் யார் கையிலே கிடைச்சாலும் கைமாதான். அவர் வேறு யாருமல்ல, திருவாளர் ஒசாமா பின்லேடன். இவர் நினைத்திருந்தால் இரட்டைக் கோபுரங்கள் போல, பல அதிசயக் கட்டடங்களை, நினைவுச் சின்னங்களை உருவாக்கி இருக்க முடியும். ஆக்க வேண்டிய

இவரை அழிவுப் பாதைக்கு அழைத்துப் போனது இவரது மதம்!" என்று டென்ஷனைக் கிளப்ப, அதைத் தணிக்க வந்தார், 'மனிதர்கள்தான் மதங்களைக் கெடுக்கிறார்கள்' என்று குரல் கொடுத்தபடியே வந்த முதலாண்டு மாணவர் திருமேனி அழகர்.

"ஆன்மிகம் என்பது சொர்க்கத்திற்கு வழி காட்டும் சாதனம் என்ற கருத்து ஒரு காலத்தில் இருந்தது. ஆனால் இன்று என்ன ஆனது? பூமியிலே நரகத்தை அல்லவா படைத்துக் கொண்டிருக்கிறது? நினைக்கவே நெஞ்சு பதறுகிறது! யூதர்களின் ஆடைகளை அவிழ்த்துப் பார்த்து, கூட்டம் கூட்டமாய் கொலை செய்த நாஜிக்களைப் போலல்லவா, குஜராத்தில் நடந்தது! மதங்கள் கொலை வெறியையா போதிக்கின்றன?

இந்தியா சுதந்திரத்திற்குப் பிறகு நாட்டு விடுதலைக்காகப் போராடினோம் என்று மக்களிடம் வோட்டுக் கேட்டார்கள். அதன் பிறகு சாதனைகளைச் சொல்லி வோட்டுக் கேட்ட காலம் ஒன்று இருந்தது. அய்யோ! இன்று மதத்தைச் சொல்லி, மத உணர்வுகளைத் தூண்டிவிட்டு அல்லவா வோட்டுக் கேட்கிறார்கள் நமது நாட்டில்! இதை மதமா செய்யச் சொன்னது?"

கரவொலி காதைப் பிளக்க, அடுத்து வந்தார், இறுதி யாண்டு மாணவர் சத்தியராஜ்.

"மதம் மனிதனை சுயமாகச் சிந்திக்க விடுகிறதா என்றால், இல்லை. இரண்டு பிரபலமான மனிதர்கள். ஒருவர் அல் உம்மா பாட்சா. இன்னொருவர் அப்துல் கலாம். ஒருவர் மனத்தில் மதப்பற்று புகுந்தது. வன்முறைக்கு பலியாகிவிட்டார்.

இன்னொருவர் மனத்தில் நாட்டுப் பற்று புகுந்தது. இந்தியாவை 2020க்குள் வல்லரசாக்கிட உழைத்துக் கொண்டிருக்கிறார். இருவருமே இஸ்லாமிய சகோதரர்கள்தான்" என்று எடுத்துச் சொல்ல, அவரது வாதத்திற்கு எதிர்வாதம் சொல்ல, இறுதியாக வந்தார் முதலாண்டு மாணவி விஜயலட்சுமி.

'உன் மதமா? என் மதமா? ஆண்டவன் எந்த மதம்?' என்று ஒரு கவிஞன் நெற்றியடியாகக் கேட்டான். கடவுளை நேரில் பார்த்துக் கேட்டால், "நான் எந்த மதத்திலும் இருக்க விரும்பவில்லை" என்று வருத்தத்தோடு சொல்வார். 'தெய்வம் பலப் பல சொல்லி, பகைத் தீயை வளர்ப்பவர் மூடர்' என்று பாரதி பொங்கினான். மதம் ஒரு வெள்ளை ரோஜா. அதை கறுப்புக் கண்ணாடி போட்டுக் கொண்டு பார்க்கும் மனிதன் கறுப்பு ரோஜா என்கிறான். மதம் மனிதர்களைக் கெடுக்கவில்லை. மனிதன்தான் மதங்களைக் கெடுக்கிறான்" என்று முத்தாய்ப்பாக முடித்தார்.

தொகுப்பு: **ஜெய்**

படங்கள்: **திண்டுக்கல் ஜெயச்சந்திரன்**



"எதிரணி வேட்பாளரை 'ஹாஃப்பாயில்', 'எல்போர்டு', 'ஜீரோ'னு இங்கிலீஷ்ல திட்டறாரே நம்ம தலைவர் ஏன்?"

"அரை வேக்காடு, கத்துக்குட்டி, கோழி முட்டை'னு திட்டினால் பச்சை பச்சையா திட்டறதா புகார் கொடுத்துடறாங்களாம். அதான் இப்படி...!

- கேஜிஎஸ். கோவிந்தன்



"என்ன இதுக்குப் போயி டென்ஷன் ஆகறீங்க...! ஒரே நேரத்துல ரெண்டு படத்துக்கு கால்ஷீட் குடுக்கற மாதிரி, ஒரே நேரத்துல ரெண்டு கட்சிக்கும் பிரசாரம் பண்ண கால்ஷீட் குடுத்திருக்கேன்!"

- பில்கேட்ஸ்

# சூடிக் கொடுத்த சுடர்க்கொடி

ஆனந்தி

திருவாடிப் பூரத்து
ஜகத்துதித்தாள் வாழியே
திருப்பாவை முப்பதும்
செப்பினாள் வாழியே...

என்று கோதை நாச்சியாரை வாழ்த்திக் கொண்டே, ஸ்ரீவில்லிபுத்தூர் வடபத்ர சாயி கோவிலுக்குள் நுழைகிறோம்.

'மார்கழித் திங்கள், ஆழி மழைக் கண்ணா! எல்லே! இளங்கிளியே, கருப் பூரம் நாறுமோ..' கணுவில்லாத செங் கரும்பு, ஆண்டாளின் பாடல்கள். சுவைக் கச் சுவைக்க ரஸம் சொட்டும் பாடல்கள். பாமாலையோடு பூமாலையும் ரங்க மன்னாருக்கு சாத்தி மகிழ்ந்த பாவை.

கோதையின் கதை அனைவரும் அறிந்ததே. பெரியாழ்வார் திருத்துழாய்ச் செடியின் நிழலில் கண்டெடுத்த சுடர்க் கொடி. பெரியாழ்வார் புஷ்பமாலை கைங்கரியம் செய்து வந்த கோவிலில் குடி கொண்டிருந்த வடபத்ரசாயியைக் கண்ணபிரானாகவே கண்டவள். தன் மனம் கவர்ந்தவனுக்குத் தந்தை கட்டிய மாலைகள் அழகாக இருக்குமா என்று பார்க்க, தானே சூடிக் கொண்டு அழகு பார்த்தவள், தெய்வநாயகனையே மணப் பேன் என்று பிடிவாதமாக இருந்தவள்.

கோங்கலரும்பொழில்
மாலிருஞ்சோலையில்
கொன்றைகள்மேல்
தூங்குபொன்மாலைகளோ
டுடனாய்நின்று
தூங்குகின்றேன்

என்று மாலிருஞ்சோலை மணாளனின் மார்பில் தவழப் பூத்திருக்கும் கொன்றை மலர்ச் சரமாகவே தன்னை பாவித்துக் கொள்கிறாள் கோதை. அப்படிப் பூத்திருப்பதை ஒரு தவமாகக் கருதுகிறாள்.

ஸ்ரீ மணவாள மாமுனிகள் ஆண்டாளை எப்படிக் கொண் டாடுகிறார்!

ஆடிப்பூரத்தன்று கோதையின் பிறந்த நாள் என்பது ஞாபகம் வந்து விடுகிறது.

இன்றோ திருவாடிப் பூரம்!
எமக்காக
அன்றோ இங்கு ஆண்டாள்
அவதரித்தாள்! - குன்றாத
வாழ்வான வைகுந்த வான்போகந்
தன்னை இகழ்ந்து
ஆழ்வார் திருமகளாராய்.

வைகுந்தத்தில் பெரு மானோடு வீற்றிருக்கும் போகத் தைத் துறந்து, நம்மை உய் விப்பதற்காக இந்தப் பூவுலகில் வந்து ஆழ்வார் மகளாக அவதரித்தாளே! என்று உருகு கிறார். ஒரு பெரிய வைஷ்ணவ குருவால் கொண்டாடப்பட்டவள்






கோதை நாச்சியார்.

கருடாழ்வாரைத் தரிசித்து விட்டு ரங்கமன்னாரையும், நாச்சியாரையும் தரிசிக்க விரைகிறோம். புஷ்பமாலைகளுடன் மணப்பெண்ணாகவே காட்சி தருகிறாள் கோதை. செங்கோல் தாங்கி நிற்கிறார் திருமால்.

பெரியாழ்வார் சந்நிதியை வணங்கிப் பெரிய பெருமானை ஸேவித்துப் போகிறோம். கீழ்த் தளத்தில் நரசிங்கரைத் தரிசித்தோம். பன்னிரு ஆழ்வார்களும், தசாவதார மூர்த்திகளும் இங்கே தரிசனம் தருகிறார்கள். மேல் தளத்துக்குக் கோபால விலாஸம் என்று பெயர். மிக அழகாகப் புதுப்பித்திருக்கிறார்கள். நல்ல வேலைப்பாடு மிகுந்த மண்டபம். பார்க்கப் பார்க்க நுண்ணிய மர வேலைப்பாடுகள் ரம்யமாக இருக்கின்றன.

பிறகு விமலாக்ருதி விமானத்தின் கீழ்

வடபத்ரசாயியைக் கண்குளிரக் கண்டு மனம் உருகுகிறோம். ஆண்டாளின் மனம் கவர்ந்த பெருமாள். இவருக்கு ஆலிலைப்பள்ளியான் என்ற தமிழ்ப் பெயர் அழகாக இருக்கிறது. சான்றாக ஆலமரத்தைக் காட்டுகிறார் பட்டர். வடவால விருக்ஷம் என்றார். வடக்கே கயாவில் இதன் வேர் எட்டியிருக்கிறது என்றார்.

ஆலமரம் இருந்தாலும், ஆதிசேடன் மீதுதான் பள்ளி கொண்டிருக்கிறார் ரங்கநாதர். திருமகளும் புவி மகளும் அடிவருட, சூரியன், சந்திரன், அருணன், வில்லி, கண்டன், ப்ருகு முனிவர், மார்க்கண்டேய முனிவர் அனைவரும் ஸேவிக்க, நமக்கு ஸேவை சாதிக்கிறார். ஆலிலைப் பள்ளியான் நாகணைப் பள்ளியானாகவே இருக்கிறார்.

உற்சவ மூர்த்தியின் பெயரைக் கேளுங்கள்! 'அல்லல் தவிர்த்த பிரான்!'

ஆண்டாள் பிறந்த இடம் என்று காட்டினார்கள். மனம் கனிந்து ஆண்டாளுடைய கிளி தாங்கிய கரத்தையும், சாயக் கொண்டையில் பூச்சுற்றி முத்துக்கள் தொங்குவதையும், நீண்ட மலர் மாலையைச் சூடிக் கொண்டு ஆடியில் அவள் அழகு பார்த்ததையும், "சிற்றில் வந்து சிதையேலே" என்று குழந்தைக் கண்ணனைத் தடுத்ததையும், சங்கைப் பார்த்து உருகியதையும், கூடல் இழைத்துக் குறி பார்த்ததையும், குயிலைத் தூது அனுப்பியதையும் நினைத்துக் கொண்டு, ஆண்டாளுடைய தமிழ்ச் சொல்லாட்சியை வியக்கிறோம். பெரியாழ்வாரிடம் வளர்ந்த பெண் எப்படி இருப்பாள், செந்தமிழ்ச் செல்வியாகத்தானே இருப்பாள்!

கோதை நாச்சியாரின் கிளி, எப்போதும் கோவிந்த நாமத்தைச் சொல்லும். அதனாலேயே கிளியிடம் கோதைக்கு ஒரு வாத்ஸல்யம். கையில் ஏந்திய கிளி, கோதையின் காதில் கண்ண பெருமானின் பேரைச் சொல்லிக் கொண்டே இருக்கும். அதனாலேயே கோதை நாச்சியார், கிளியின் வாய் காதருகில் இருக்கும்படி தூக்கிப் பிடித்துக் கொண்டிருக்கிறார். நாயகனிடம் பிரியாவிடை பெற்று நோன்புக்குச் செல்லும் போதும், தன் செல்லக் கிளியோடுதான் போவாள் கோதை. அந்தக் கிளி செய்த பாக்கியத்தை என்னவென்பது!

கூட்டில் இருந்து கிளி எப்போதும்
கோவிந்தா! கோவிந்தா!
என்றழைக்கும்!
ஊட்டுக் கொடாது
செறுப்பன்ஆகில்
"உலகளந்தான்" என்று உயரக்
கூவும்!
நாட்டில் தலைப்பழி எய்திஉங்கள்
நன்மை இழந்து தலை இடாதே
சூட்டுயர் மாடங்கள் சூழ்ந்து
தோன்றும்
துவராபதிக்குஎன்னை
உய்த்திடுமின்

கோதை வளர்த்த கிளி என்ன பேசும்? வாய் ஓயாமல் 'கோவிந்தா! கோவிந்தா!' என்று அரற்றி வந்தது. கண்ணன் நினைவில் ஏங்கி ஏங்கி வாடிக் கொண்டிருந்த கோதைக்கு, இது தாபத்தைக் கொழுந்து விட்டெரியச் செய்தது! விரஹ தாபத்தில் தவித்த கோதை, கிளிக்கு உணவு அளிக்க மறந்து விட்டாள். அந்தக் கிளி என்ன செய்தது தெரியுமா? "உலகளந்தான்!" என்று வைகுண்டநாதனையே அழைக்கத் தொடங்கி விட்டது. அது போட்ட கூச்சலில், தன் நினைவு அடைந்த ஆண்டாள் தன் அன்னையிடம், "இந்தக் கிளி என் மனநிலையை அறிந்திருக்கிறதே. நீங்கள் உணரவில்லையே! என்னால் உங்களுக்குப் பழி ஏற்படுவதற்கு முன் என்னைத்

## அருள்வாக்கு

கோயில், சர்ச், மசூதி, விஹாரம் முதலிய கட்டடங்கள் ஒன்றுக்கொன்று வித்தியாசப்படலாம். உள்ளே இருக்கிற மூர்த்தி அல்லது சின்னம் மாறுபடலாம். ஒவ்வொன்றிலும் சடங்குகளும் வேறு வேறாக இருக்கலாம். ஆனால் அநுக்கிரஹம் செய்கிற பரமாத்மா மாறவில்லை. ஒவ்வொரு தேச ஆசாரத்தையும், ஒவ்வொருவித ஜனக்கூட்டத்தின் மனப்பான்மையையும் பொறுத்துப் பல்வேறு சமயங்கள் ஏற்பட்டிருக்கின்றன. இவையெல்லாம் ஓரே பரமாத்மாவை அவரவர்

னோபாவப்படி பக்தி செய்து, அவரோடு சேருவதற்கு வழி செய்பவையே. எனவே, எவரும் தங்கள் மதத்தை விட்டுவிட்டு இன்னொன்றுக்கு மாற வேண்டியதில்லை. இப்படி மதம் மாறுகிறவர்கள் தாங்கள் பிறந்த மதத்தைக் குறைவுபடுத்துவது மட்டுமின்றி, தாங்கள் சேரும் மதத்தையும் குறைவுபடுத்துகிறார்கள்; கடவுளையும் குறைவுபடுத்துகிறார்கள். தாங்கள் மாறுகிற புது மதத்துக்கும், அதன் கடவுளுக்கும் கூட இவர்கள் குறுகலான எல்லை கட்டி விடுகிறார்கள். ஒரு மதத்திடம் கௌரவ புத்தி இருப்பதாக நினைத்து, அதற்கு மாறுகிறபோதே அதை வாஸ்தவத்தில் அகௌரவப் படுத்தி விடுகிறார்கள்.

- ஜகத்குரு காஞ்சி காமகோடி
ஸ்ரீ சந்திரசேகரேந்திர சரஸ்வதி
சங்கராச்சார்ய சுவாமிகள்



துவாரகைக்கு அனுப்பி விடுங்கள்" என்று கெஞ்சுகிறாள்.

அன்புக்கிளியை வளர்த்த கோதைக்குக் கிளியைப் பிரிந்திருக்க முடியாதல்லவா? ஏழிலை மரம் என்ற மரத்திலிருந்து தினமும் இலை பறித்து 'கிளி' செய்து, மாதுளம் மொட்டினால் அதற்கு பவள மூக்கு செய்து வைத்து, ஆண்டாளுக்குக் கையில் தருகிறார்கள். ஏழிலையைக் காட்டினார் ஒரு பெரியவர். நீண்ட காம்பும் ஏழாகப் பிரிந்த இலையுமாகக் கரும் பச்சை நிறத்தில் வெண் நரம்புகளுடன் இருந்தது.

"இந்த இலையில் ஈரப்பசை குறைவு. மடிக்கவும் நன்றாக வரும். தினமும் ஒரு கிளி செய்து, தாயாருக்குச் சாத்துவோம். நாலைந்து நாள் கூடப் புத்தம் புதியதாய் இருக்கும்" என்று பெருமிதத்துடன் சொன்னார்.

ஞாயிற்றுக்கிழமை தோறும் ஆலயத்தில் ஆன்மிகச் சொற்பொழிவு நடைபெறுகிறது.

மார்கழி மாதம் நோன்பு உண்டல்லவா? வடபத்ரசாயியிடம் தாயார் விடை கேட்பாள். ஆலிலைப்பள்ளியான் முன்பு கோதை நாச்சியாரை எழுந்தருளப் பண்ணி, இரண்டு மணி நேரம் கதவைச் சாத்தி விடுவார்கள். பிரியாவிடை பெற்று, பாவை நோன்பு நோற்பதற்குப் போவாள் கோதை. மார்கழியில் கடைசி ஏழுநாள் எண்ணெய்க் காப்பு உற்சவம். எதிரும் புதிருமாக எழுந்தருளப் பண்ணுவார்கள். எண்ணெய்க் காப்பு ஆனபிறகு, யதாஸ்தானத்துக்கு அழைத்துச் செல்லப்படுவாள்.

அழகு மயமான பக்தி! அழகுமயமான பாடல்கள். அழகு மயமான கோவில்! அழகு மயமான நோன்புகள். திருமாலுக்கு அன்பு செய்வதைவிட அழகு எது?

**எழிலுடைய வம்மனைமீர்**
**என்னரங்கத் தின்னமுதர்**
**குழலழகர் வாயழகர் கண்ணழகர்**
**கொப்பூழில்**
**எழுகமலப் பூவழக ரெம்மானார்**
**என்னுடைய**
**கழல்வளையைத் தாமும் கழல்**
**வளையே யாக்கினாரே**

தன் கைவளைகள் கழன்று விழும்படியாக, உடல் மெலியச் செய்து விட்ட அழகனுடைய செய்கை அழகுதான்! என்று அவனுடைய அழகைச் சொல்லியே புலம்புகிறாள்.

ஆண்டாள் பாசுரங்களைப் படித்து உருகிய வைணவப் பெரியார்கள் எத்தனையோ பேர்.

நவவித பக்தி என்று சொல்வார்கள். அதில் ஆத்மநிவேதனம் என்பது, தன்னையே அர்ப்பணித்து விடுவது. உடல், பொருள், ஆவி அனைத்தும் அவனுக்கே சொந்தம் என்ற பரிபக்குவநிலை..

இந்த நிலையில் நின்று பகவானை அடைந்தவள் ஆண்டாள்.

ஆண்டாள் திருவடிகளே சரணம்!

(தொடரும்)

# தாகத்தில் பெரும் சோகமே!

'ஜதி' படத்தின் ஹீரோ சத்யா, மன்னார்குடிக்காரராம். முக ஜாடையைப் பார்த்தால் சசிகலா குடும்பத்து உறவினர் போலத் தெரிகிறதே... யூகம் ஜதி... ஸாரி, சரிதானா?

'எம். குமரன் சன் ஆஃப் மகாலட்சுமி' என்ற வித்தியாசமான டைட்டிலோடு களமிறங்கியிருக்கிறது 'ஜெயம்' கூட்டணி. வழக்கம் போல அப்பா தயாரிக்கிறார். மூத்த மகன் இயக்குனர், இளைய மகன் ஹீரோ. அம்மாவின் இனிஷியலைப் போட்டுக் கொள்ளும் ஹீரோ, அதற்கு ஆப்பு வைக்க வரும் காதலி, என்று கதை நகர்கிறதாம். மோதிக் கொள்ளும் தாய்க்குலங்களாக நதியாவும், அஸினும் பட்டையைக் கிளப்பப் போகிறார்களாம். அப்போ ரவி படத்துலே என்ன பண்றார்? வெள்ளித்திரையில் காண்க!


• 'எம். குமரன்' படத்தில் ரவி, அஸின்

தற்போது தமிழ் ரசிகர்களால் சென்ட்ரல்லாவாக கிரீடம் சூட்டப்பட்டிருக்கும் பூஜா அறிமுகமானது, ஜீவா இயக்கி முடித்திருக்கும் 'உள்ளம் கேட்குமே' (பெப்சி) படத்தில். ஆனால் 'ஜே.ஜே' முந்திக் கொண்டு விட, 'அட்டகாசம்' உட்பட ஐந்து படங்களில் மளமளவென்று புக்காகிவிட்டார் பூஜா. எல்லாவற்றுக்கும் இயக்குனர் சரண்தான் காரணம் என்று, தம்மைப் பேட்டியெடுக்க வருகிற நிருபர்களிடம் சொல்லிக் கொண்டிருக்கிறாராம். கவனம் மேடம்! வெளி வரப் போகும் 'பெப்சி' படத்தில், உங்கள் பாத்திரத்தையே கத்திரிக்குச் காவு கொடுத்து விடப் போகிறார்கள். அப்புறம் தாகத்தில் பெருந்தாகம்... ஸாரி, சோகம் அல்லவா...?

- ஸ்ரீ

• 'உள்ளம் கேட்குமே' - பூஜா


• 'ஜதி' சத்யா

அடுத்த இதழ்

# கல்கி

சித்திரைச் சிறப்பிதழாக
மலர்கிறது

## அரவிந்த அமுதம்

புதுவையின் ஆன்மிக ஜோதியை
மலர் யோகத்தை, உங்கள் உள்ளம்
தொடும்படி எழுதவிருக்கிறார்
**திருப்பூர் கிருஷ்ணன்**

---

'அரசியல் நாயகர்கள்!'
-இலவச இணைப்பு

**2 புத்தகங்கள்**

## உள்ளங்கையில் உலகம்!

**சுதா மூர்த்தி**
எழுதும்
ஊக்கத் தொடர்
ஆரம்பம்



உள்ளே...
உத்தியோகம்
பொருத்த லட்சணம்

மினி கல்கி

Registered with the Registrar of Newspaper of India under No. 1041/57 * Registered No. TN / PMG (CCR) 572 / 03 - 05 *
Licensed to post without prepayment under PMG's Licence No. WPP 358 / 03 - 05 * Registered as a Newspaper in Srilanka